# திராவிட மணிவாசகம்











...ல் பப்ளிஷிங் கம்பெனி.

...கம்பாக்கம், சென்னை.6

# திராவிட
# மணி வாசகம்

## மூன்றும் புத்தகம்

E. RATNABAI DAVIS, M. ED.

AND

REV. BR. M. A. MANUEL, S.H.J., B.A., L.T.,

*Headmaster, Christuraja Training School, Palamcottah.*




இன்டர்நாஷனல் பப்ளிஷிங் கம்பெனி

நுங்கம்பாக்கம் :: சென்னை–6

 [விலை அணா 8

# DRAVIDA MANI VACHAKAM

BY

E. RATNABAI DAVIS, M. ED.,

REV. BR. M. A. MANUEL, S.H.J., B.A., L.T.

STANDARD III

---

*Reprint*—1955



Kabeer Printing Works, Madras (2812)*

# முன்னுரை

இந்நூல் வரிசையில் இது மூன்றும் புத்தகம். இரண்டாம் புத்தகத்தில் சிறு சொல் தொடர்களையும், வாக்கியங்களையும் கற்றுத் தேர்ந்த குழந்தைகள், இப் புத்தகத்தில் ஒரு பாடத்தில் பல வாக்கியங்களால் சொல்லப்படும் பொருள்களையும் அவற்றின் கருத்துக் களையும் கற்றுத் தேர்ச்சியடையும் வகையில் இரண்டாம் வகுப்பைவிடச் சற்று உயர்ந்த நடையில் பாடங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

கற்ற பாடங்களின் பொருள், குழந்தைகள் உள்ளத் திற் பதியுமாறு ஆங்காங்கே புது முறையில் பயிற்சிகள் சேர்க்கப் பெற்றிருக்கின்றன. வகுப்பின் தரத்திற்கு உகந்தவாறு பாடங்களின் பொருள்கள் தேர்ந்தெடுத்து அமைக்கப்பட்டிருக்கின்றன. இந்நூல் நன்கு அமைவ தற்கு இன்றியமையாத யாவும் இயன்றவரை செய்யப் பட்டுள்ளன.

கிறிஸ்துராஜா ஆசிரியர் பயிற்சிப் பள்ளி ஆசிரி யர்கள் தம் அநுபவத்தால் ஆராய்ந்து, மாணவர்க்கு நேரிடையாகக் கற்பித்து, அதன் பயனாய் இந்நூல் சிறந்த முறையில் அமைய நேர்ந்தது குறிப்பிடத் தக்கது. அவர்கட்கு எமது மனமார்ந்த நன்றி. தமிழன் பர்கள் இப்புத்தகத்தை ஆதரித்து உதவுவார்கள் என்று திண்ணமாக நம்புகிறோம்.

பதிப்பாளர்கள்.

# பொருளடக்கம்

# மூன்றாம் வகுப்பு

## 1. தமிழ்த் திருநாடு




தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற—எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா!
அமிழ்தில் இனியதடி பாப்பா!—நம்
ஆன்றோர்கள் தேசமடி பாப்பா!



2812—2

சொல்லில் உயர்வுதமிழ்ச் சொல்லே—அதைத்
தொழுது படித்திடடி பாப்பா!
செல்வம் நிறைந்தஇந்து ஸ்தானம்—அதைத்
தினமும் புகழ்ந்திடடி பாப்பா! 2

வடக்கில் இமயமலை பாப்பா!—தெற்கில்
வாழும் குமரிமுனை பாப்பா!
கிடக்கும் பெரியகடல் கண்டாய்—இதன்
கிழக்கிலும் மேற்கிலும் பாப்பா! 3

—பாரதியார்

### சொற்களஞ்சியம்

| | | | |
|---|---|---|---|
| திரு | உயர்வு | நிறைந்த | இமயமலை |
| கும்பிடு | தொழுது | புகழ்ந்து | குமரிமுனை |
| அமிழ்து | செல்வம் | கண்டாய் | ஆன்றோர் |

### பொருள் விளக்கம்

திரு - அழகிய, அமிழ்தம் - தேவர் உணவு, ஆன்றோர் - பெரியோர்.

### கேள்விகள்

1. தமிழ் நாட்டை ஏன் தாய் என்று வணங்க வேண்டும்?
2. தமிழ் எப்படிப்பட்ட மொழி?
3. இந்தியாவின் எல்லைகள் யாவை?

# 2. எங்கள் வீடு



1. இது எங்கள் வீடு. எங்கள் வீடு மாடி வீடு. எங்கள் வீடு பெரிய வீடு. எங்கள் வீட்டில் ஒரு கூடமும் ஐந்து அறைகளும் இருக்கின்றன; மாடியில் ஒரு கூடமும் மூன்று அறைகளும் இருக்கின்றன.

2. சமையல் அறை, சாமான் அறை, சாப்பாட்டு அறை இவைகள் எல்லாம் கீழே இருக்கின்றன. என் தகப்பனார் ஓர் அறையில் அவருடைய புத்தகங்களை அலமாரிகளில் அடுக்கி வைத்திருக்கிறார். மற்றோர் அறையில் அவர் அமர்ந்து படிப்பது, எழுதுவது ஆகிய வற்றைச் செய்வார்.

3. மாடியில் உள்ள அறைகளை என் அண்ணனும் அக்காளும் வைத்துக்கொண்டு இருக்கிறார்கள். நாங்கள் மாடியில் உள்ள கூடத்தில் அமர்ந்து அமைதியாகப் பாடங்களைப் படிப்போம். எங்கள் தகப்பனார் எழுதிக் கொண்டு இருக்கும்பொழுது அவர் அறைக்கு அருகில் செல்லமாட்டோம். எங்கள் தாயார் கூப்பிட்ட பிறகு கீழே இறங்கிச் செல்லுவோம்; கைகால்களைக் கழுவிக்கொண்டு சாப்பாட்டு அறைக்குப் போவோம். நாங்கள் எல்லோரும் ஒன்றாக இருந்து சாப்பிடுவோம்.

4. எங்கள் வீட்டின் பக்கத்தில் தோட்டம் போட்டிருக்கிறோம். எங்கள் வீட்டுத் தோட்டத்தில் வாழை மரங்கள் வளர்ந்து இருக்கின்றன; பூச்செடிகளும் நிறைய இருக்கின்றன. என் தங்கை பூக்களைப் பறித்து, சரமாகத் தொடுத்து, தலையில் சூடிக்கொள்வாள். எங்கள் வீட்டின் பின்புறம் ஒரு கிணறு இருக்கிறது. நாங்கள் அதிலிருந்து தண்ணீர் இறைப்போம்.

5. எங்கள் வீட்டை எங்கள் தாயார் எப்பொழுதும் சுத்தமாக வைத்துக் கொள்ளுவார். எங்கள் வீடு காற்றோட்டம் உள்ள வீடு; எப்பொழுதும் காற்று வீசிக்கொண்டே இருக்கும். அறைகள் எல்லாம் விசாலமாகவும்

வெளிச்சமாகவும் இருக்கும். எங்கள் வீடு நல்ல வீடு.

### சொற்களஞ்சியம்

| | | |
|---|---|---|
| மாடி | நிறைய | தொடுத்து |
| கூடம் | சுத்தமாக | அமர்ந்து |
| சமையல் | வெளிச்சம் | செல்ல |
| பிறகு | அமைதி | மாட்டோம் |
| வளர்ந்து | இறங்கி | கூப்பிட்ட |
| சூடி | பொழுது | எப்பொழுதும் |
| விசாலம் | கழுவி | சரமாக |
| சாமான் | பறித்து | வீசிக்கொண்டே |
| அலமாரி | காற்று | அடுக்கி |

### கேள்விகள்

1. மாடியில் எத்தனை அறைகள் இருக்கின்றன ?
2. தகப்பனார் புத்தகங்களை எங்கே வைத்து இருக்கிறார் ?
3. தோட்டத்தில் என்ன என்ன இருக்கின்றன ?

### பயிற்சி

கோடிட்ட இடங்களை நிரப்புக :—

1. மற்றோர் அறையில் அவர் —— எழுதுவார்.
2. வீட்டின் —— தோட்டம் இருக்கிறது.
3. வீட்டின் —— கிணறு இருக்கிறது.
4. வீட்டை —— சுத்தமாக வைத்துக் கொள்வார்.

### இலக்கணம்

'எங்கள் வீடு நல்ல வீடு'—இது ஒரு சொற்றொடர். (சொல்+தொடர்.) இந்தச் சொற்றொடர் ஒரு முழுக் கருத்தைத் தெரிவிக்கிறது. இதற்கு வாக்கியம் என்று பெயர். ஒவ்வொரு வாக்கியத்தின் முடிவிலும் (.) ஒரு முற்றுப்புள்ளி இடவேண்டும்.

# 3. எங்கள் ஊர்




1. இது எங்கள் ஊர். எங்கள் ஊரின் பெயர் போரூர். ஊருக்குப் பக்கத்தில் **பாலாறு** என்னும் ஆறு ஓடுகிறது. ஊருக்குச் சிறிது தூரத்தில் சிறு குன்றுகள் இருக்கின்றன. ஊரின் நடுவில் கோவில் ஒன்று இருக்கிறது. கோவிலுக்குப் பக்கத்தில் எங்கள் பள்ளிக்கூடம் இருக்கிறது. அந்தப் பள்ளிக் கூடத்தில்தான் நான் படிக்கிறேன்.

2. எங்கள் ஊரில் ஏறக்குறைய நானூறு வீடுகள் இருக்கின்றன. வீடுகள் வரிசை வரிசையாய்க் கட்டப்பட்டு இருக்கின்றன. எங்கள் ஊரில் நான்கு பெரிய தெருக்கள் உண்டு.

ஒவ்வொரு தெருவிலும் ஓடுகள் பரப்பப்பட்ட வீடுகளும், ஓலையால் வேய்ந்த வீடுகளும் அதிக மாய் உள்ளன. மாடி வீடுகள் சிலவே உண்டு. தெருக்கள் அகலமாய் இருக்கும்; அவைகளின் இடை இடையே சில சிறிய சந்துகளும் இருக் கின்றன. சந்துகள் மிகவும் குறுகலானவை.

3. எங்கள் ஊரில் ஒரு மருத்துவச்சாலை இருக்கிறது. நோயாளிகளுக்கு அங்கே இல வசமாக மருந்து கொடுக்கிறார்கள். எங்கள் ஊர் தபால் நிலையம் மிகவும் சிறியது. எங்கள் ஊர் மருத்துவச்சாலைக்குப் பக்கத்தில் ஊர்-ஆட்சி மன்றம் இருக்கிறது. மன்றத் தலைவர் எங்கள் ஊருக்கு வேண்டிய நன்மைகளை எல் லாம் செய்து தருவார்.

4. எங்கள் ஊரில் பலர் பயிர்த் தொழில் செய்பவர்கள். ஊரைச் சுற்றிலும் செழிப்பான வயல்கள் இருக்கின்றன. வயல்களை உழுது, நெல், கரும்பு, வாழை முதலியவைகளைப் பயிர் செய்வார்கள். பயிர்த் தொழில் செய்பவர் களைத் தவிர, கொல்லர், தச்சர், மண்பாண்டம் செய்வோர், துணி வெளுப்போர் ஆகியவர்கள் இருக்கிறார்கள். இவர்கள் எல்லோரும் ஒருவ ருக்கு ஒருவர் உதவியாக இருப்பார்கள். எங்கள் ஊரில் எல்லோரும் ஒற்றுமையாக வாழ்ந்து வருகிறார்கள்.

## சொற்களஞ்சியம்

| | | | |
|---|---|---|---|
| ஆறு | அமைந்த | எங்கும் | நோயாளி |
| ஆட்சி | பலர் | உதவி | வாழ்த்து |
| குன்று | தெரு | இடை | இலவசம் |
| மன்றம் | செழிப்பான | ஒற்றுமை | ஒவ்வொரு |
| ஏறக்குறைய | பரப்பப்பட்ட | நானூறு | தலைவர் |
| சிறிது | எல்லோரும் | வேய்ந்த | சந்து |
| காணப்படும் | பயிர்த்தொழில் | தவிர | நன்மை |
| மருத்துவச்சாலை | | தபால் | நிலையம் |

## கேள்விகள்

1. பள்ளிக்கூடம் ஊரில் எங்கே இருக்கிறது ?
2. வீடுகள் எப்படி அமைந்து இருக்கின்றன ?
3. ஊர் ஆட்சி மன்றத் தலைவர் என்ன என்ன செய்து தருவார் ?
4. ஊரில் உள்ள தொழிலாளர்கள் யாவர் ?

## பயிற்சி

1. எதிர்ச் சொற்கள் :

அகலமாக × குறுகலாக
பெரியது × சிறியது
நன்மை × தீமை
ஒற்றுமை × வேற்றுமை

2. தெரிந்துகொள்க :

வரிசை வரிசையாய்
இடை இடையே

இவைபோல் வருவன அடுக்குத்தொடர்.

3. கோடிட்ட இடங்களை நிரப்புக :

(1) சந்துகள் மிகவும் ——.
(2) நோயாளிகளுக்கு —— மருந்து ——.
(3) ஊரைச் சுற்றிலும் —— வயல்கள் இருக்கின்றன.

# 4. எங்கள் ஊர்ச் சந்தை

1. எங்கள் ஊரில் வெள்ளிக்கிழமை தோறும் சந்தை கூடும். சந்தை கூடும் இடத்திற்கு, **சந்தைப்பேட்டை** என்று பெயர். சந்தை கூடும் நாளில் எங்கள் ஊர் கலகலப் பாக இருக்கும். எங்கள் ஊருக்குப் பக்கத்தில் உள்ள கிராமங்களிலிருந்து பலர் எங்கள் ஊருக்கு வருவார்கள். அவர்கள் தங்களுக்கு வேண்டிய பொருள்களைச் சந்தையில் வாங்கிக் கொண்டு திரும்புவார்கள்.

2. சந்தைப் பேட்டை பெரும்பாலும் ஊருக்குச் சற்று வெளியேதான் இருக்கும். அங்கு நிழல் தரும் மரங்கள் இருக்கின்றன. சந்தை அன்று மரங்களின் அடியில் வியாபாரி கள் பல பண்டங்களை வைத்துக்கொண்டு விற் பனை செய்வார்கள்.

3. சந்தையில் அரிசி, நெல், சோளம், கம்பு, கேழ்வரகு முதலிய பலவகைத் தானியங் கள் வாங்கலாம். வியாபாரிகள் தானியங் களைக் குவியலாகக் குவித்து வைத்து, படியால் அளந்து விற்பார்கள். வேறு சில வியாபாரி கள் உப்பு, புளி, மிளகாய், மண்ணெண்ணெய் போன்ற பண்டங்களை விற்பனை செய்வார்கள். மண்பாண்டங்கள் ஒருபுறம் அடுக்கப்பட்டு

இருக்கும். கிராம மக்கள் தங்களுக்கு வேண்டிய சட்டி, பானை, கலயம் முதலியவைகளை அங்கே வாங்கிக் கொள்வார்கள். காய்கறிகள், வாழை இலை முதலியவைகளும் சந்தையில் கிடைக்கும்.

4. எல்லாக் கிராமங்களிலும் பலவகைப் பண்டங்களும் கிடைக்கக் கூடிய கடைகள் இருப்பதில்லை. எல்லாக் கிராமங்களிலும் சந்தை கூடுவதும் இல்லை. சில பெரிய கிராமங்களில் மட்டுமே வாரம் ஒரு முறை சந்தை கூடும். அக்கம்பக்கத்தில் உள்ள கிராமங்களிலிருந்து மக்கள் அங்கே வந்து தங்களுக்கு வேண்டிய பொருள்களை வாங்கிப் போவார்கள்.

5. சந்தையில் எப்பொழுதும் சந்தடியாகவே இருக்கும். ‘சந்தை இரைச்சல்’ என்று கேள்விப்பட்டிருக்கிறாயா ? வாங்குவோர் சத்தமும், விற்பவர் சத்தமும் ஒரே இரைச்சலாகத் தோன்றும். சந்தை கூடும் தினத்தில் பல வகை மிட்டாய்கள் விற்பவர்களும் வருவார்கள். நாங்கள் மிட்டாய் வகைகளை வாங்கித் தின்போம்.

## சொற்களஞ்சியம்

| | | |
|---|---|---|
| பேட்டை | சற்று | பேர்கள் |
| பெரும்பாலும் | விற்பனை | நிழல் |
| பண்டம் | குவித்து | கேழ்வரகு |
| குவியல் | இரைச்சல் | அளந்து |
| சந்தடி | பலவகை | சத்தம் |
| போன்ற | தானியம் | பொருள்கள் |
| வியாபாரம் | மண்ணெண்ணெய் | பாண்டம் |
| கலகலப்பாக | வியாபாரிகள் | பெரும்பாலும் |

## கேள்விகள்

1. சந்தை கூடும் இடத்திற்கு என்ன பெயர்?
2. சந்தையில் என்ன என்ன விற்கப்படுகின்றன?
3. வியாபாரிகள் தானியங்களை எப்படி விற்பனை செய்கிறார்கள்?

## பயிற்சி

I. சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுதுக:

பக்கத்தில், நிழல், விற்பனை, குவியல், அளந்து, கிடைக்கும், ஒருமுறை, பலவகை.

II. கோடிட்ட இடங்களை நிரப்புக:

1. சந்தை கூடும் நாளில் எங்கள் ஊர் —— இருக்கும்.
2. சந்தையில் —— தரும் மரங்கள் ——.
3. மண்பாண்டக் கடையில் —— —— —— முதலியவைகள் வாங்கலாம்.
4. சந்தையில் எப்பொழுதும் —— இருக்கும்.

## இலக்கணம்

கை, சந்தை—இவை சொற்கள். இவற்றுள் கை என்பது ஓர் எழுத்துத் தனித்து நின்று ஒரு பொருளைக் குறிக்கிறது. சந்தை என்பது பல எழுத்துக்கள் சேர்ந்து நின்று ஒரு பொருளைக் குறிக்கிறது. இவ்வாறு ஓர் எழுத்துத் தனித்து நின்றும், பல எழுத்துக்கள் சேர்ந்து நின்றும் ஒரு பொருளைக் குறிப்பது சொல் ஆகும்.

# 5. படக் கதை

## பயிற்சி

I. எதிர்ப் பக்கத்தில் உள்ள படத்தைப் பார்த்துக் கீழ்க் காணும் கேள்விகளுக்கு விடை கூறுக :

1. முதல் படத்தில் நீ என்ன என்ன பார்க்கிருய்?
2. இரண்டாவது படத்தில் நீ காண்பது என்ன?
3. நான்காம் படத்தில் சிங்கம் எங்கு இருக்கிறது?
4. ஐந்தாம் படத்தில் சுண்டெலி என்ன செய்கிறது?
5. இந்தக் கதைக்கு என்ன தலைப்புக் கொடுப்பாய்?

II. கீழ்க் காணும் சொற்களை ஏற்றவாறு அமைத்து வாக்கியங்களாக எழுதுக.

1. வீடு எங்கள் இது.
2. அங்கு தரும் இருக்கின்றன மரங்கள் நிழல்.
3. வாங்கித் தின்போம் வகைகளை மிட்டாய் நாங்கள்.
4. ஒன்ருக சாப்பிடுவோம் எல்லோரும் நாங்கள் இருந்து.
5. எங்கள் பெரிய வீடு வீடு.
6. அந்தப் படிக்கிறேன் பள்ளிக்கூடத்தில் நான்.
7. சிறியது ஊர் தபால் எங்கள் நிலையம்.

# 6. மாணவ நண்பர்கள்



1. நான் மூன்றும் வகுப்பில் படிக்கிறேன். என் வகுப்பில் முப்பது மாணவர்கள் படிக்கிறார்கள். அவர்களுள் நான்கு பேர்களுடன் நான் நெருங்கிப் பழகுவேன். அவர்கள் என்னிடம் எப்பொழுதும் அன்பாய் இருப்பார்கள். நாங்கள் ஐவரும் இணைபிரியாத நண்பர்கள்.

2. என் நண்பர்கள் பெயர் முறையே, கந்தன், இராமன், சுல்தான், தாமஸ். என் பெயர் சுந்தரம். கந்தன், முதலியார் வகுப்பைச் சேர்ந்தவன். இராமன், அந்தணர் வகுப்பைச் சேர்ந்தவன். சுல்தான், ஒரு முஸ்லீம். தாமஸ், கிறிஸ்தவ மதத்தைச் சேர்ந்தவன்.

நான் வேளாளர் வகுப்பைச் சேர்ந்தவன். நாங்கள் வெவ்வேறு மதங்களையும், வகுப்புக் களையும் சேர்ந்தவர்கள் ஆனாலும் எங்களுக் குள் வேறுபாடு எண்ணுவதில்லை. எல்லோரும் உடன் பிறந்தவர்கள் போலவே கூடிப் பழகு வோம்.

4. நாங்கள் ஐவரும் எங்கள் வகுப்பில் ஒன்றுகவே அமர்வோம். ஒருவருக்கு ஒருவர் உதவி செய்து கொள்ளுவோம். கந்தன் கணக் கில் வல்லவன். எங்களுக்கு விளங்காத கணக்குகள் போடும் முறையை அவன் எங் களுக்கு விளக்கிக் கூறுவான். எங்களுக்கு ஏதேனும் விளங்காவிட்டால் அவனையே கேட் டுத் தெரிந்து கொள்ளுவோம். அவன் மிகவும் நல்லவன். கணக்கில் வல்லவன் என்று அவன் கர்வம் கொள்ள மாட்டான்.

4. பள்ளிக்கூடம் விட்டபின் நாங்கள் ஐவரும் கூடிப் பாடசாலை விளையாட்டு வெளி யில் விளையாடுவோம். தாமஸ் பந்து ஆட்டத் தில் சிறந்தவன். அவன் அடிக்கும் பந்தை எங்களால் தடுக்க முடியாது. சுல்தான், 'பார்' விளையாட்டில் வல்லவன். அவன் 'பாரில்' பலவிதமான விளையாட்டுக்கள் விளையாடு வான். நாங்கள் விளையாடும்பொழுதும் நேர் மையாக நடந்து கொள்ளுவோம். நாங்கள்

எப்போதும் இப்படியே இணைபிரியாத நண்பர்களாக இருந்துவர விரும்புகிறோம்.

### சொற்களஞ்சியம்

| | | | |
|---|---|---|---|
| நெருங்கி | பழகு | நண்பர் | இணைபிரியாத |
| முதலியார் | முஸ்லீம் | கிறிஸ்தவர் | அந்தணர் |
| வெவ்வேறு | மதங்கள் | வேறுபாடு | ஐவர் |
| வல்லவன் | கணக்கு | விளக்கி | தெரிந்து |
| கர்வம் | சிறந்தவன் | தடுக்க | 'பார்' |
| நேர்மை | இப்படியே | விரும்பு | அமர்வோம் |

### கேள்விகள்

1. சுந்தரத்தின் நண்பர்கள் யாவர்?
2. கந்தன் எந்த வகுப்பைச் சேர்ந்தவன்?
3. இவர்கள் எல்லோரும் எப்படிப் பழகுகிறார்கள்?
4. கந்தன் நண்பர்களுக்கு எப்படி உதவுவான்?
5. கந்தனை ஏன் நல்லவன் என்று சொல்லுகிறார்கள்?
6. தாமஸ் எந்த ஆட்டத்தில் சிறந்தவன்?
7. சுல்தான் எந்த விளையாட்டு விளையாடுவான்?
8. இந்த நண்பர்களின் விருப்பம் என்ன?

### பயிற்சி

1. எதிர்ச் சொற்கள் :

நெருங்கி × ஒதுங்கி
கூடி × பிரிந்து
நல்லவன் × கெட்டவன்

2. சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுதுக :

முப்பது, நெருங்கி, சேர்ந்தவன், வேறுபாடு, பழகுவோம், விளக்கி, வல்லவன், விரும்புகிறோம்.

## இலக்கணம்

மனிதன், மாடு, மரம், பந்து—இவை பொருள்களின் பெயர்களைக் குறிக்கின்றன. இவை பெயர்ச் சொற்கள். இவ்வாறு பொருளின் பெயரைக் குறிக்கும் சொல் பெயர்ச்சொல் எனப்படும்.

படிக்கிறேன், பழகுவோம்—இவை செயலைக் குறிக்கின்றன. இவை வினைச் சொற்கள். பொருளின் செயலைக் குறிக்கும் சொல் வினைச்சொல்.

பின்வரும் வாக்கியங்களில் வந்துள்ள பெயர்ச் சொற்களை எடுத்து எழுதுக :

1. சுந்தரம் பந்து விளையாடினான்.
2. கந்தன் புத்தகம் கொடுத்தான்.
3. அருணன் படம் வரைந்தான்.
4. நான் பள்ளிக்கூடம் சென்றேன்.

# 7. ஔவையார்

1. நமது தமிழ் நாட்டில் தமிழ்ப் புலவர்கள் பலர் வாழ்ந்து வந்தனர். அவர்களுள் பெண்பாலாரும் சிலர் உண்டு. பெண்பாற் புலவருள் சிறந்து விளங்கியவர் **ஔவையார்**. தமிழ் நாட்டில் ஔவையாரைப் பற்றி அறியாதவர் ஒருவரும் இரார்.

2. ஔவையார் கவி பாடுவதில் மிகவும் வல்லவர். அவருடைய பாடல்கள் சுவை மிகுந்தவை. கவி பாடிக் கொண்டே அவர் ஊர் ஊராகச் செல்வார். அவர் அரசர்களின் அரண்மனையிலும் பாடுவார் ; ஏழைகளின் குடிசைகளிலும் பாடுவார். அரண்மனை விருந்து கிடைத்தாலும், ஏழைகளின் கூழ் கிடைத்தாலும் அவர் மகிழ்ச்சியோடு உண்பார்.

3. ஔவையார் எல்லா உயிர்களிடத்திலும் அன்பு உடையவர். ஏழை, பணக்காரர் என்ற வேற்றுமை அவருக்கு இல்லை. தமது கவித் திறமையால் அவர் ஏழைகளையும் செல்வர் ஆக்குவார். அவர் வாழ்ந்த காலத்தில் அவரைப் புகழாதவர் எவரும் இல்லை.

4. அக்காலத்தில் **அதியமான்** என்னும் அரசன் தகடூரை ஆண்டு வந்தான். ஔவையார் பல மாதங்கள் அவன் அரண்மனையில்

தங்கி அவனோடு வாழ்ந்து வந்தார். ஔவை-யார் அவனுக்கு உயிர்த் தோழராக விளங்கினார்.

5. ஒரு நாள் அதியமானுக்கு அற்புதமான நெல்லிக்கனி ஒன்று கிடைத்தது. அந்தக் கனியைப் புசித்தால், புசித்தவர் நெடுங் காலம் வாழலாம். அதியமான் அந்த நெல்லிக் கனியைத் தான் உண்ணவில்லை. 'ஔவையாரே இதை உண்பதற்கு ஏற்றவர். அவர் நீண்ட நாள் வாழ்ந்தால், தமிழருக்கும் தமிழுக்கும் நன்மை உண்டாகும்' என்று அவன் கருதினான்.

6. ஆதலால், அந்த அற்புத நெல்லிக் கனியை அதியமான் ஔவையாருக்கு அன்புடன் அளித்தான்; ஆனால், அதன் சிறப்பை அவரிடம் சொல்லவில்லை. ஔவையார் கனியைப் புசித்த பிறகு உண்மையைக் கூறினான். ஔவையார் மனம் மகிழ்ந்து அவன் அன்பைப் பாராட்டினார்; அவனை மனமார வாழ்த்தினார்.

7. ஔவையார் நமக்குப் பல நூல்கள் அருளியுள்ளார். அவற்றுள் **ஆத்திசூடி, கொன்றை வேந்தன், நல்வழி** என்பவை சிறுவர்களுக்காகப் பாடப்பட்டவை. அவற்றில் அரிய நீதிகள் அடங்கியுள்ளன. நீங்கள் அவற்றைப் படிக்க வேண்டும். அவற்றில் கூறியுள்ளபடி நடந்து கொள்ள வேண்டும்.

## சொற்களஞ்சியம்

| | | | |
|---|---|---|---|
| அறியாதவர் | புலவர்கள் | பெண்பால் | சிலர் |
| அரண்மனை | விருந்து | குடிசை | அரசர் |
| திறமை | செல்வர் | கூழ் | வேற்றுமை |
| விளங்கினர் | கனி | பணக்காரர் | புகழாதவர் |
| ஏற்றவர் | நூல் | புசித்தால் | நெடுங்காலம் |
| சிறப்பு | மகிழ்ந்து | கருதினன் | அளித்தான் |
| மகிழ்ச்சி | மனமார | வாழ்த்தினர் | அருளி |

## கேள்விகள்

1. ஔவையார் என்பவர் யார்?
2. ஔவையார் எப்படிப்பட்ட குணம் உடையவர்?
3. நெல்லிக் கனியை அதியமான் ஏன் ஔவையாருக்கு அளித்தான்?
4. ஔவையார் அருளிச் செய்த நூல்கள் எவை?

## பயிற்சி

1. எதிர்ச் சொற்கள் எழுதுக:
வேற்றுமை, ஏழை.

2. ஔவையாரைப் பற்றி வழங்கும் கதைகளில் உனக்குத் தெரிந்த ஒன்றை எழுதுக.

3. வாக்கியங்களில் அமைத்து எழுதுக:
புலவர், சிலர், மிகுந்தவை, ஆக்குவார், தங்கி, உயிர்த்தோழன், பாராட்டினர்.

## இலக்கணம்

அதியமான், முருகன், கண்ணன்—இவை ஆண்களின் பெயர்கள்.

ஔவையார், வள்ளி, இலக்குமி—இவை பெண்களின் பெயர்கள்.

ஆண்களின் பெயர்களைக் குறிப்பன ஆண்பால் பெயர்கள் என்று சொல்லப்படும்.

பெண்களின் பெயர்களைக் குறிப்பன பெண்பால் பெயர்கள் என்று சொல்லப்படும்.

கீழ்வரும் வாக்கியங்களில் உள்ள ஆண்பால், பெண்பால் பெயர்களை எடுத்து எழுதுக :

1. சுந்தரம் பள்ளிக்குச் சென்றான்.
2. கண்ணகி கோலம் போடுகிறாள்.
3. பார்வதி பாடம் படிக்கிறாள்.
4. தாமஸ் பந்து ஆடுகிறான்.
5. மங்கை வேலை செய்கிறாள்.

# 8. தென்னை மரம்



1. மரங்களில் பல வகைகள் இருக்கின்றன. அவற்றுள் **தென்னை** மரமும் ஒன்று. தென்னை மரம் உயரமாக வளர்ந்து இருக்கும். அது ஏறக்குறைய ஐம்பது அல்லது அறுபது அடி உயரம் ஓங்கி வளரும்.

2. தென்னை மரம் மணற்பாங்கான இடங்களில் செழித்து வளரும். ஆதலால், ஆற்றின் கரைகளிலும், கடற்கரை ஓரங்களிலும் தென்னை மரங்களை மிகுதியாகக் காணலாம்.

3. தென்னை மரத்துக்குக் கிளைகள் இல்லை ; ஆனால் மட்டைகள் உள்ளன. மட்டை

யின் இருபுறத்திலும் நேர் நேராக நீண்ட ஓலைகள் இருக்கின்றன. தென்னை ஓலையை நீ பார்த்திருக்கிறாயா ?

4. தென்னை மரத்தை எப்படி வளர்க்கிறார்கள் தெரியுமா ? முற்றின தேங்காய்க்கு **நெற்று** என்று பெயர். நெற்றான தேங்காயை மணற்பாங்கான நிலத்தில் நிமிர்த்திப் புதைத்து வைத்து, தண்ணீர் ஊற்றுவார்கள். அந்த நெற்று, சில நாள்களில் முளைத்துச் சிறிய கன்று ஆகும். அதுவே **தென்னம்பிள்ளை** என்று சொல்லப்படும். அதன் பிறகு, தென்னம் பிள்ளையை எடுத்து, வேறோர் இடத்தில் குழி தோண்டி நடுவார்கள். அது மரமாக உயர்ந்து வளர்ந்து, ஐந்து ஆண்டுகளில் பலன் தரும்.

5. தென்னை மரத்தில் தேங்காய் **குலை குலையாகக்** காய்க்கும். முற்றாத காய்க்கு **இளநீர்** என்பது பெயர். இளநீர் மிகவும் இனிப்பாய் இருக்கும். வெயில் நேரத்தில் மக்கள் அதை விரும்பிக் குடிப்பார்கள். நீ இளநீர் அருந்தி இருக்கிறாயா ?

6. தென்னை மரத்தின் ஒவ்வொரு பாகமும் பயன்படக் கூடியது : அடி மரம் வீடு கட்ட விட்டமாக உதவும். தென்னை ஓலைகளைக் கீற்றாக முடைந்து வீடுகளுக்குக் கூரை வேய்

வார்கள். தேங்காய் மட்டையிலிருந்து நார் எடுத்து, கயிறு திரிப்பார்கள்.

பருப்பு முற்றிய தேங்காய்க்குக் **கொப்பரை** என்று பெயர். கொப்பரையைச் செக்கில் இட்டு ஆட்டித் தேங்காய் எண்ணெய் எடுப்பார்கள். தேங்காய் எண்ணெயில் பல பலகாரங்கள் செய்வது உண்டு. சோப்பு, மெழுகு-வர்த்தி முதலியவை செய்யவும் தேங்காய் எண்ணெய் பயன்படுகிறது. தேங்காய் நமது முக்கியமான உணவுப் பொருள்களுள் ஒன்று.

### சொற்களஞ்சியம்

| | | | |
|---|---|---|---|
| வகை | அவற்றுள் | ஓங்கி | மணற்பாங்கான |
| ஆதலால் | மிகுதி | மட்டை | முற்றின |
| நெற்று | நிமிர்த்தி | புதைத்து | ஊற்று |
| வேரூர் | தோண்டி | உயர்ந்து | முற்றாத |
| இளநீர் | வெயில் | பயன் | கீற்று |
| முடைந்து | வேய்வார்கள் | நார் | கயிறு |
| திரிப்பார்கள் | கொப்பரை | இட்டு | மெழுகுவர்த்தி |

### கேள்விகள்

1. தென்னை மரம் எவ்வளவு உயரம் வளரும்?
2. தென்னை மரம் எங்கே செழித்து வளரும்?
3. தென்னை மரத்தை எப்படி வளர்க்கிறார்கள்?
4. ‘இளநீர்’ என்பது என்ன?
5. ‘கொப்பரை’ என்று எதற்குப் பெயர்?
6. தென்னையின் பயன்கள் யாவை?

## பயிற்சி

1. தெரிந்து கொள்க :

   1. தேங்காய் குலை குலையாகக் காய்க்கிறது.
   2. வாழைப்பழம் சீப்புச் சீப்பாக இருக்கிறது.
   3. பூ கொத்துக் கொத்தாகப் பூக்கும்.
   4. மாடுகள் மந்தை மந்தையாக மேயும்.

2. கோடிட்ட இடங்களை நிரப்புக :

   1. தென்னை மரத்துக்குக் கிளைகள் ——.
   2. முற்றின தேங்காய்க்கு —— என்று பெயர்.
   3. நெற்றுத் தேங்காயை —— நிலத்தில் —— புதைப்பார்கள்.
   4. தேங்காய் மட்டையிலிருந்து —— எடுத்து, —— திரிப்பார்கள்.
   5. கொப்பரையைச் —— —— ஆட்டி எண்ணெய் எடுப்பார்கள்.

## இலக்கணம்

| ஒன்று | பல |
|---|---|
| மரம் | மரங்கள் |
| பூ | பூக்கள் |
| பாடல் | பாடல்கள் |
| மொழி | மொழிகள் |
| குணம் | குணங்கள் |

இவை பெயர்ச் சொற்கள். முதல் வரிசையில் உள்ளவை ஒன்றைக் குறிக்கின்றன ; அவை ஒருமைச் சொற்கள். இரண்டாம் வரிசையில் உள்ளவை பலவற்றைக் (ஒன்றுக்கு மேற்பட்டவைகளைக்) குறிக்கின்றன. அவை பன்மைச் சொற்கள்.

# 9. திசைகள்




1. காலையில் சூரியன் உதிக்கும் திசை **கிழக்கு** என்று சொல்லப்படும். மாலையில் சூரியன் மறையும் திசை **மேற்கு** எனப்படும். கிழக்கிற்கு நேர் எதிர்த்திசை மேற்கு.

2. சூரியன் உதிக்கும் திசை கிழக்கு என்பது உனக்குத் தெரியும். காலையில் சூரியன் உதிக்கும்போது நீ சூரியனைப் பார்த்து நில். இப்பொழுது உனக்கு முன் பக்கம் இருக்கும் திசை கிழக்கு. உனக்குப் பின்பக்கம் உள்ள திசை மேற்கு. படத்தில் காட்டியபடி உன் கைகள் இரண்டையும் இரு பக்கங்களிலும் நீட்டிக்கொள். உன் வலக்கைப்புறம் உள்ள

திசை **தெற்கு**; உன் இடக்கைப்புறம் உள்ள திசை **வடக்கு**. தெற்கிற்கு நேர் எதிர்த்திசை வடக்கு. இப்பொழுது நீ நான்கு திசைகளை யும் தெரிந்துகொண்டாய் அல்லவா ?

3. கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு இவை நான்கும் முக்கியமான திசைகள் ஆகும். இந்த நான்கு திசைகளைத் தவிர, மேலும் நான்கு திசைகள் இருக்கின்றன. அவற்றை யும் தெரிந்துகொள்.

4. கிழக்குத் திசைக்கும் தெற்குத் திசைக் கும் இடையில் இருக்கும் மூலை **தென்கிழக்கு** என்று சொல்லப்படும். தெற்கிற்கும் மேற்கிற் கும் இடையில் உள்ள மூலை **தென்மேற்கு** என்று கூறப்படும். மேற்குத் திசைக்கும் வடக்குத் திசைக்கும் இடையே உள்ள மூலை **வடமேற்கு** எனப்படும். வடக்குத் திசைக்கும் கிழக்குத் திசைக்கும் இடையே உள்ள மூலை **வடகிழக்கு** எனப்படும். இப்பொழுது எட்டுத் திசைகளையும் தெரிந்துகொண்டாயா? இவை **எண் திசைகள்** என்று சொல்லப்படும்.

சொற்களஞ்சியம்

| | | |
|---|---|---|
| கிழக்கு | தென்கிழக்கு | மறையும் |
| மேற்கு | வடமேற்கு | எனப்படும் |
| தெற்கு | தென்மேற்கு | எண்திசைகள் |
| வடக்கு | வடகிழக்கு | மூலை |

## கேள்விகள்

1. கிழக்குத் திசைக்கு நேர் எதிர்த்திசை எது?

2. சூரியனைப் பார்த்து நின்றால் உன் வலக்கைப் பக்கம் என்ன திசை?

3. வடகிழக்குத் திசை என்று எதைக் கூறுகிறோம்?

4. தென்கிழக்குத் திசைக்கு நேர் எதிர்ப்புறம் உள்ள திசைக்கு என்ன பெயர்?

## பயிற்சி

இணைத்து எழுதுக:

| | | |
|---|---|---|
| வடக்கிற்கு | | தென்கிழக்கு |
| தென்மேற்கிற்கு | எதிர்த் திசை | தெற்கு |
| வடமேற்கிற்கு | | வடகிழக்கு |

## இலக்கணம்

பெயர்களைக் குறிக்கும் சொற்கள் பெயர்சொற்கள் என்று முன்பு தெரிந்து கொண்டீர்கள்.

பெட்டி — ஒரு பொருளின் பெயர்.
நாடு — ஓர் இடத்தின் பெயர்.
காலை — காலத்தின் பெயர்.
கை — உறுப்பின் பெயர்.
இனிமை — குணத்தின் பெயர்.
ஆடுதல் — தொழிலின் பெயர்.

1. பொருளின் பெயரைக் குறிப்பது பொருட் பெயர்.

(உ - ம்.) பலகை, குடை, மரம்.

2. இடத்தின் பெயரைக் குறிப்பது இடப்பெயர்.
(உ - ம்.) நாடு, ஊர், தோட்டம்.

3. காலத்தின் பெயரைக் குறிப்பது காலப் பெயர். (உ-ம்.) இரவு, பகல், மாதம்.

4. உறுப்பின் பெயரைக் குறிப்பது சினைப் பெயர். (உ-ம்.) கிளை, விரல், வேர்.

5. குணத்தின் பெயரைக் குறிப்பது குணப்பெயர். (உ-ம்.) நன்மை, வெண்மை, நேர்மை.

6. தொழிலின் பெயரைக் குறிப்பது தொழிற் பெயர்.

(உ-ம்.) படித்தல், ஆடல், உறங்குதல்.

பெயர்ச்சொல், மேலே கண்டவாறு (1) பொருட் பெயர், (2) இடப் பெயர், (3) காலப் பெயர், (4) சினைப் பெயர், (5) குணப் பெயர், (6) தொழிற் பெயர் என்று ஆறு வகைப்படும்.

# 10. நன்றி மறந்த பெருமாட்டி



1. ஓர் ஊரில் ஓர் ஏழைக் கிழவி இருந்தாள். அவள் ஒரு சிறிய குடிசையில் வசித்து வந்தாள். ஒரு நாள் அவள் வீட்டிற்கு விருந்தினன் ஒருவன் வந்து சேர்ந்தான். அந்தக் கிழவி அவனுக்கு அன்புடன் உணவு அளித்தாள். விருந்தினன் வயிறுர உண்டு, மனம் மகிழ்ந்தான். அவன் அந்தக் கிழவிக்குப் பெரிய வாத்து ஒன்றைப் பரிசாக அளித்துவிட்டுப் போனான்.

2. அந்த வாத்து மிகவும் அற்புதச் சக்தி வாய்ந்தது. அது தினந்தோறும் தங்க முட்டை ஒன்று இட்டு வந்தது. கிழவி, தங்க முட்டையை விற்று, நிறையப் பணம் சம்பாதித்

தாள். இவ்வாறு கிழவி விரைவில் பணக்காரி ஆனாள். அவள் தன் குடிசையை இடித்து அழகிய மாளிகை ஒன்று கட்டி அதில் வாழ்ந்து வந்தாள். அந்தக் கிழவியை எல்லோரும் பெருமாட்டி என்று அழைக்கலானார்கள்.

3. பணக்காரியானதும் கிழவிக்குக் கர்வம் உண்டாகியது. அவள் தன் பழைய நிலையை மறந்தாள்; எல்லோரையும் அலட்சியமாக நடத்தத் தொடங்கினாள். அவளுக்கு மேலும் மேலும் பணம் சேர்ந்து கொண்டே இருந்தது.

4. நாள் ஆக ஆக, வாத்து பருத்து வளர்ந்து வந்தது. அது மாளிகை யெங்கும் சுற்றித் திரியும்; ஆங்காங்கே எச்சமிட்டு அசுத்தம் செய்யும். அது ‘ குவா குவா ’ என்று எப்பொழுதும் பெருஞ் சத்தமிடும்.

5. பெருமாட்டி வாத்தை வெறுக்கத் தொடங்கினாள். மாளிகையை அது அசுத்தம் செய்வதை அவளால் பொறுக்க முடியவில்லை. வாத்து இடும் இரைச்சலும் அவளால் தாங்க முடியவில்லை. ‘ நமக்கு நிறையப் பணம் சேர்ந்து விட்டது. இனி இந்த வாத்து எதற்கு ? இதைக் கொன்று விட்டால் என்ன ?’ என்று எண்ணினாள். தன் வேலைக்காரனைக்

கூப்பிட்டு வாத்தைக் கொன்று விடச் சொன்னாள்.

6. வேலைக்காரன் வாத்தைப் பிடிக்கச் சென்றான். அது அவன் கைக்கு அகப்பட வில்லை; கூவிக்கொண்டு அங்கும் இங்கும் ஓடியது. அப்பொழுது கிழவியின் மாளிகை ஒரே குழப்பமாக இருந்தது. அந்தச் சமயம் வாத்தைப் பரிசளித்த விருந்தினன் திடீரென்று அங்குத் தோன்றினான். வாத்து அவனைக் கண்டதும் அவனிடம் ஓடியது. அவன் அந்த வாத்தை எடுத்து அணைத்துக் கொண்டான். கிழவியை நோக்கி, "கிழவி! உனக்கு நான் அன்புடன் இந்த வாத்தை அளித்தேன். நீ அதனால் பெருமாட்டி ஆனாய். நீ பணக்காரி யாகக் காரணமாக இருந்த இந்த வாத்தையே நீ கொல்லத் துணிந்தாய்! உனக்குச் சிறிதும் நன்றி இல்லை. நன்றியை மறந்த உனக்கு நன்மை கிடைக்காது," என்று கூறி, வாத் துடன் மறைந்து விட்டான்.

7. சிறிது நேரத்தில் காற்றும் மழையும் தோன்றின; இடி இடித்தது. கிழவியின் மாளிகை மட மடவென்று இடிந்து விழுந்தது. மாளிகையில் இருந்த பொருள்கள் எல்லாம் மாயமாய் மறைந்தன. கடைசியில், கிழவி, குடிசையும் இல்லாமல் தவித்தாள். "நன்றியை

மறந்து நன்மை இழந்தேனே!'' என்று வருந்தினாள்.

### சொற்களஞ்சியம்

| | | | |
|---|---|---|---|
| பரிசாக | விருந்தினன் | உணவு | வயிறுர |
| மாளிகை | அற்புதம் | நிறைய | விரைவில் |
| எச்சமிட்டு | பெருமாட்டி | தொடங்கினாள் | பருத்து |
| குழப்பம் | வெறுக்க | முடியவில்லை | கட்டளை |
| மறந்த | பழைய | தோன்றினான் | நன்றி |
| இழந்தேன் | மறைந்து | மாயமாய் | தவித்தாள் |
| பொறுக்க | வருந்தினாள் | சம்பாதித்தாள் | நிலை |

### கேள்விகள்

1. கிழவிக்குக் கிடைத்த பரிசு யாது?
2. அவள் எவ்வாறு விரைவில் பணக்காரி ஆனாள்?
3. கிழவி வாத்தை ஏன் வெறுக்கத் தொடங்கினாள்?
4. அவள் ஏன் வாத்தைக் கொல்லத் துணிந்தாள்?
5. விருந்தினன் கிழவியை நோக்கி என்ன கூறினான்?

### பயிற்சி

1. வாத்தின் கதை வேறு ஏதாகிலும் தெரிந்தால் அதை எழுதுக.

2. முறைப்படுத்தி வாக்கியமாக எழுதுக:

(1) பணக்காரி கிழவி ஆனாள் விரைவில்.

(2) வாத்து வந்தது வளர்ந்து பருத்து.

(3) நமக்கு வாத்து இந்த எதற்கு இனி?

(4) இந்த அளித்தேன் அன்புடன் நான் வாத்தை உனக்கு.

# 11. எங்கள் கிராம ஆட்சி



**சுந்தரம் :** அப்பா, நீங்கள் சாவடியில் மணியக்காரரிடம் பணம் கொடுத்தீர்களே, அது எதற்காக? நீங்கள் அவரிடம் கடன் வாங்கி யிருந்தீர்களா ?

**தகப்பனுர் :** இல்லே. நமது நிலங் களுக்கு வரி செலுத்த வேண்டும் அல்லவா? அந்த வரிப் பணத்தையே அவரிடம் செலுத்தி விட்டு வந்தேன்.

**சுந்த :** அதை ஏன் இவரிடம் செலுத்தி னீர்கள்?

**தகப்.** : வரிப் பணத்தை நம்மிடமிருந்து வாங்குவதற்கு அரசாங்கத்தார் மணியக்காரரை நியமித்திருக்கிறார்கள். அவர் கிராம மக்களிட மிருந்து வரிப் பணத்தை வாங்கி, அரசாங்கத் திற்கு அனுப்பி விடுவார்.

**சுந்த.** : நாம் எவ்வளவு வரி செலுத்த வேண்டும் என்பது அவருக்கு எப்படித் தெரியும்?

**தகப்.** : அவர் பக்கத்தில் ஒருவர் கணக் குப் புத்தகத்தைப் பார்த்துச் சொன்னார் அல்லவா? அவர் **கணக்கப் பிள்ளை.** அவர் நாம் செலுத்த வேண்டிய வரிப் பணம் எவ் வளவு என்று கணக்கு வைத்திருப்பார். கணக்கப் பிள்ளை மணியக்காரருக்கு உதவியாக இருப்பவர். கிராமத்தின் முக்கிய அதிகாரி **மணியக்காரர்.**

**சுந்த.** : மணியக்காரருக்குப் பணம் வாங் குவது தவிர வேறு வேலைகள் உண்டா, அப்பா?

**தகப்.** : கிராமத்தில் நடக்கும் சிறு சண்டை சச்சரவுகளைத் தீர்த்து வைப்பார்; கலகங்கள் நடந்தால் அடக்குவார்; கிராமத்தின் பிறப்பு இறப்புக்களைக் குறித்து வைப்பார். இவருக்குக் கிராம முனிசீபு என்றும் பெயர் உண்டு.

**சுந்த.** : கணக்கப் பிள்ளையின் வேலை என்ன, அப்பா?

**தகப்.** : ஒவ்வொருவரும் செலுத்தவேண்டிய வரிப் பணம் இவ்வளவு என்று கணக்கு வைத்துக் கொள்வார்; ஒவ்வொருவர் நிலத்தையும் அளந்து குறித்து வைப்பார்; மேலும், மணியக்காரருக்கு உதவியான எல்லா வேலைகளையும் செய்வார். இவர்கள் இருவரும் **கிராம அதிகாரிகள்.**

**சுந்த.** : இவர்களைத் தவிர, கிராம ஆட்சியைச் சேர்ந்தவர்கள் வேறு யாராவது இருக்கிறார்களா?

**தகப்.** : தலையாரி, வெட்டியான், நீர்க்கட்டி என்னும் ஊழியர்கள் இருக்கிறார்கள். மணியக்காரர், கணக்கப் பிள்ளை இவர்கள் இடும் கட்டளைகளை இவர்கள் நிறைவேற்றி வைப்பார்கள். தலையாரி இராக் காலங்களில் கிராமத்தைக் காவல் புரிவான். வெட்டியான் கணக்கப் பிள்ளையுடன் இருந்து நிலங்களை அளக்க உதவுவான். நீர்க்கட்டி என்பவன் கிராமத்தில் உள்ள எல்லா வயல்களுக்கும் கால்வாய்களின் மூலம் சரிவர நீர் பாயுமாறு கவனித்துக் கொள்வான். இவர்கள் எல்லோரும் **கிராம ஊழியர்கள்.** இவர்கள் எல்லோரும் அரசாங்கத்தாரால் நியமிக்கப்பட்டவர்கள்.

## சொற்களஞ்சியம்

| | | | |
|---|---|---|---|
| சாவடி | வரி | செலுத்த | மணியக்காரர் |
| நியமித்து | அதிகாரி | அரசாங்கம் | கணக்கப்பிள்ளை |
| சச்சரவு | கலகம் | பிறப்பு | தலையாரி |
| இறப்பு | கடன் | விவரம் | வெட்டியான் |
| குறித்து | ஆட்சி | ஊழியர் | கட்டளை |
| நிறைவேற்றி | அளக்க | பாயுமாறு | நீர்க்கட்டி |

## கேள்விகள்

1. மணியக்காரரை யார் நிமித்திருக்கிறார்கள்?
2. மணியக்காரர் வாங்கும் வரிப் பணத்தை என்ன செய்கிறார்?
3. மணியக்காரரின் வேலைகள் யாவை?
4. கணக்கப் பிள்ளையின் வேலைகள் யாவை?
5. கிராம முனிசீபு என்று யாருக்குப் பெயர்?
6. கிராம அதிகாரிகள் என்று யார் யாருக்குப் பெயர்?
7. தலையாரி செய்யும் வேலைகள் யாவை?
8. கிராம ஊழியர்கள் யாவர்?

## பயிற்சி

I. வேறுபாடு தெரிந்து கொள்க:

அதிகாரிகள்—ஊழியர்கள்.

II. கீழ்க் காணும் வாக்கியங்களில் உள்ள வினைச் சொற்களை எடுத்து எழுதுக:

1. அவன் படம் வரைந்தான்.
2. பள்ளிக்குச் சென்றான் முருகன்.
3. கமலம் பாட்டுப் பாடுகிறாள்.
4. பசு புல்லை மேய்கிறது.
5. ஆடு தழையைத் தின்றது.

# 12. படக் கதை

எதிர்ப்புறமுள்ள படங்களைப் பார்த்து, கீழ்க்காணும் கேள்விகளுக்கு விடை கூறுக :

1. முதல் படத்தில் நீ என்ன காண்கிருய் ?
2. இரண்டாம் படத்தில் நாகம் என்ன செய்கிறது?
3. நான்காம் படத்தில் காகம் என்ன செய்கிறது ?
4. அங்குக் காணப்படும் கட்டடம் என்னவென்று உனக்குத் தெரியுமா ?
5. ஐந்தாம் படத்தில் காகம் என்ன செய்கிறது ?
6. ஆரும் படத்திலிருந்து நீ அறிந்து கொள்வது என்ன ?

**மாதிரி :**

1. ஒரு மரத்தின் மேல் ஒரு காகம் கூடுகட்டி யிருக்கிறது. அந்தக் கூட்டில் அது முட்டையிட்டிருக் கிறது. அந்த மரத்தில் ஒரு பொந்து இருக்கிறது. அந்தப் பொந்தில் ஒரு நாகம் இருக்கிறது. காகம் பறந்து வந்து கொண்டிருக்கிறது.

கீழ்க்காணும் குறிப்புக்களின் உதவி கொண்டு மற்றக் கேள்விகளுக்கு விடையளி :

நாகம்—முட்டை—தின்கிறது— முத்துமாலை — காகம்—கௌவிச் செல்கிறது — அரண்மனை — சேவகர்கள்—பொந்தில் — நாகத்தை — கொன் ருர்கள்.



## 13. பாரதியார்

1. ' தமிழ்திரு நாடுதன்னைப் பெற்ற—எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா !'

என்ற பாடலை முன் படித்தீர்கள் அல்லவா? இந்தப் பாடல் பாடியவர் **பாரதியார்**. பாரதியாரின் முழுப் பெயர் **சுப்பிரமணிய பாரதியார்** என்பது. இவர் ஒரு சிறந்த தமிழ்க் கவிஞர். இவருடைய பாடல்கள் நாடு முழுவதும் பரவியுள்ளன.

2. எழுபத்து மூன்று ஆண்டுகளுக்கு முன் திருநெல்வேலி ஜில்லாவில் உள்ள எட்டையபுரம் என்னும் கிராமத்தில் பாரதியார்

பிறந்தார். சின்னசாமி ஐயர் என்பவர் இவர் தந்தையார்; இலக்குமி அம்மையார் இவர் தாயார். பாரதியாருடைய ஐந்தாவது வயதில் அன்னையார் இறந்து விட்டார்.

3. பாரதியார் தமிழ், ஆங்கிலம் ஆகிய இரு மொழிகளையும் நன்கு கற்றுத் தேர்ந்தார்; தமிழில் கவிபாடும் திறமை பெற்றார். இவர் எப்பொழுதும் படித்துக் கொண்டும், எழுதிக் கொண்டும், கவி பாடிக்கொண்டும் இருப்பார்.

4. பதினைந்தாவது வயதில் இவருக்குத் திருமணம் நடந்தது. தந்தையார், **செல்லம் மாள்** என்ற பெண்மணியை இவருக்கு மணம் செய்து வைத்தார். திருமணம் முடிந்த பின்பு, இவர் தந்தையாரும் காலமானார். காசியில் பாரதியாரின் அத்தையார் ஒருவர் இருந்தார். பாரதியார் அங்கே சென்று அவருடன் சில காலம் இருந்தார். காசியில் இருந்தபொழுது இவர் இந்தி, ஸம்ஸ்கிருதம் என்னும் மொழி களைக் கற்றார்.

5. பாரதியார் தமது இருபதாவது வயதில் எட்டையபுரத்திற்குத் திரும்பினார். எட்டைய புரத்து அரசர் இவரை அன்புடன் ஆதரித் தார். பின்பு, பாரதியார் சில காலம் மதுரை யில் தமிழ் ஆசிரியராய் வேலை செய்தார். இவருக்கு அத்தொழிலில் விருப்பம் இல்லை.

பின்பு அதை விட்டுச் சென்னைக்குச் சென்றார். அங்கே இவர் நாட்டின் விடுதலைக்கு உழைக்கலானார். அரசாங்கத்தார் இவரைச் சிறையில் வைக்க எண்ணினர். அதை அறிந்த பாரதியார், புதுச்சேரிக்குச் சென்று அங்கு வசித்து வந்தார்.

6. புதுச்சேரியில் பாரதியார் பல கஷ்டங்களுக்கு உள்ளானார்; உண்ண உணவும், உடுக்க உடையும் இன்றி மனைவி மக்களோடு மிகவும் துன்பப் பட்டார். நண்பர்கள் சிலர் அவருக்கு உதவி அளித்தார்கள். துன்பக் காலத்திலும் பாரதியார் மனம் கலங்காமல் முகமலர்ச்சியோடு இருந்தார்.

7. சில ஆண்டுகளுக்குப் பிறகு, பாரதியார் மீண்டும் சென்னைக்குத் திரும்பினார்; 'சுதேசமித்திரன்' என்னும் பத்திரிகையின் உதவி ஆசிரியராய் அமர்ந்தார். அந்தப் பத்திரிகையின் வாயிலாக அவர் பல பாடல்களையும் கதைகளையும் எழுதி வெளியிட்டார். பாரதியார் தமது முப்பத்தொன்பதாவது வயதில் காலமானார்.

8. பாரதியார் சிறந்த தமிழ்க் கவிஞர்; நாட்டுப்பற்று மிகுந்தவர்; கடவுள் பக்தி நிறைந்தவர்; தன்னலம் கருதாத தன்மை வாய்ந்தவர். இவருடைய பாடல்களும் கதை

களும் இவருக்குப் பெரும் புகழை அளிக்கின்றன. தமிழ் மக்கள் இவரை இன்றும் போற்றுகின்றனர்; இவருடைய கவிதைகளைப் படித்துப் பயன் பெறுகின்றனர்; இவருடைய நினைவுச் சின்னமாக எட்டையபுரத்தில் ஒரு மண்டபமும் நூல் நிலையமும் அமைத்துள்ளனர்; ஆண்டுதோறும் இவர் நாளைத் திரு நாளாகக் கொண்டாடி வருகின்றனர்.

## சொற்களஞ்சியம்

| | | | |
|---|---|---|---|
| கவிஞர் | பரவி | ஆங்கிலம் | கவிதை |
| திருமணம் | பெண்மணி | இந்தி | திறமை |
| மணந்தார் | ஜில்லா | ஸம்ஸ்கிருதம் | கஷ்டம் |
| ஆதரித்தார் | விடுதலை | சிறை | தொல்லை |
| வறுமை | முகமலர்ச்சி | பக்தி | பத்திரிகை |
| வாயிலாக | தேசபக்தர் | தன்னலம் | பற்று |
| வாய்ந்தவர் | புகழ் | சின்னம் | நிலையம் |

## கேள்விகள்

1. பாரதியாரின் முழுப் பெயர் என்ன?
2. பாரதியார் எங்கே பிறந்தார்?
3. காசியில் பாரதியார் என்ன பயின்றார்?
4. பாரதியார் புதுச்சேரிக்குச் செல்லக் காரணம் என்ன?
5. பாரதியார் சென்னையில் என்ன வேலை பார்த்தார்?
6. பாரதியாரின் குணச் சிறப்புக்கள் யாவை?
7. பாரதியாரை எப்பொழுதும் நினைவு கொள்ளுமாறு என்ன செய்திருக்கிறார்கள்?

## 14. உங்கள் கடமை

1. பிள்ளைகளே! நீங்கள் ஒவ்வொரு நாளும் பலருடன் பழகுகிறீர்கள். உங்கள் குடும்பம், பள்ளிக்கூடம், விளையாடும் இடம் ஆகிய இடங்களில் நீங்கள் பொழுதைக் கழிக்கிறீர்கள். குடும்பத்தில் தாயார், தகப்பனார், உடன் பிறந்தவர்கள் ஆகியவர்களுடன் பழகுகிறீர்கள். பள்ளிக்கூடத்தில் உங்கள் வகுப்பு மாணவர்கள், ஆசிரியர்கள் ஆகியோருடன் பழகுகிறீர்கள். விளையாடும் இடத்தில் உங்கள் நண்பர்களுடன் பழகுகிறீர்கள். ஒவ்வொருவருடனும் எவ்வாறு பழக வேண்டும் என்பதை நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும்.

2. நம்மைப் பெற்று வளர்க்கும் தாயும் தந்தையும் நாம் தொழும் கடவுளுக்கு ஒப்பானவர்கள். 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்பதை நீங்கள் நினைவிற் கொள்ள வேண்டும். பெற்றோர் இடும் கட்டளைகளுக்கு நீங்கள் எப்பொழுதும் கீழ்ப்படிந்து நடக்க வேண்டும். அவர்கள் வார்த்தையை நீங்கள் ஒருபோதும் தட்டலாகாது. 'தந்தை சொல் மிக்க மந்திரம் இல்லை;' 'தாய் சொல் துறந்தால் வாசகம் இல்லை;' என்னும் மணிமொழிகளை நீங்கள் மறக்கலாகாது. அவர்களிடம்

மிகவும் பணிவுடன் நடந்து கொள்ளவேண்டும். உடன் பிறந்தவர்களிடம் அன்பு பாராட்ட வேண்டும். ஒரு குடும்பத்தில் உள்ள யாவரும் ஒருவருக்கு ஒருவர் உதவியாக இருத்தல் வேண்டும்.

3. பள்ளிக்கூடத்தில் நீங்கள் உங்கள் வகுப்பு மாணவர்களுடன் நெருங்கிப் பழகு கிறீர்கள். நீங்கள் அவர்கள் எல்லோரையும் உங்கள் உடன் பிறந்தவர்கள் போல் நேசிக்க வேண்டும். மாணவர்களுக்குள் ஏழை, பணக் காரன் என்னும் வேறுபாடு கருதக் கூடாது. எல்லோரும் ஒரே குடும்பத்துப் பிள்ளைகளைப் போலப் பழக வேண்டும். படிப்பில் உங்களை விடப் பின் தங்கியவர்களை ஏளனம் செய்யக் கூடாது. உங்களால் முடிந்த வரையில் உங்கள் மாணவ நண்பர்களுக்கு உதவி செய்ய வேண்டும்.

4. 'எழுத்து அறிவித்தவன் இறைவன் ஆகும்' என்பது நம் முன்னோர் கண்ட உண்மை. உங்களுக்குக் கல்வி கற்பிக்கும் ஆசிரியரைத் தெய்வம் போல் கருதவேண்டும். ஆசிரியர் எப்பொழுதும் உங்கள் முன்னேற்றத் திலேயே கருத்தாக இருக்கிறார்; உங்கள் நன் மைக்கு வேண்டியவைகளைக் கற்றுக் கொடுக் கிறார். அவரிடம் மிகவும் பணிவாக நடந்து

கொள்ளவேண்டும். அவர் பாடம் கற்பிக்கும் பொழுது மிகவும் கருத்தாய்க் கவனிக்க வேண்டும். ஆசிரியர் மனம் வருந்தும்படி நீங்கள் ஒருபொழுதும் நடந்து கொள்ளக் கூடாது.

5. உங்கள் நண்பர்களிடம் நீங்கள் எப்பொழுதும் உடன் பிறந்தவர்கள் போல் நடந்து கொள்ள வேண்டும். அவர்களுடன் விளையாடும்பொழுது நேர்மையைக் கடைப்பிடிக்க வேண்டும். விளையாட்டில் தோல்வி யடைந்தவர்களைக் கேலி செய்தல் கூடாது.

6. மேலே கூறியவை யெல்லாம் நீங்கள் மேற்கொள்ள வேண்டிய கடமைகள். நீங்கள் இவற்றிலிருந்து ஒருபொழுதும் தவறலாகாது.

### சொற்களஞ்சியம்

| | | | |
|---|---|---|---|
| பழகு | கழிக்கிறீர்கள் | ஒப்பானவர் | கீழ்ப்படிந்து |
| தட்டல் | இடும் | நெருங்கி | நேசிக்க |
| பின் தங்கிய | ஏளனம் | மணிமொழி | கல்வி |
| கற்பிக்கும் | முன்னேற்றம் | கருத்தாக | மனம் |
| கடைப்பிடிக்க | கடமை | தவறுதீர்கள் | முன்னோர் |

### கேள்விகள்

1. உங்கள் பெற்றோரிடம் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும்?

2. உடன் பிறந்தவர்களுடன் எவ்வாறு பழக வேண்டும்?

3. வகுப்பு மாணவர்களை எவ்வாறு கருதவேண்டும்?

4. வகுப்பு மாணவர்களுடன் நீங்கள் நடந்து கொள்ள வேண்டும் முறை யாது?

5. ஆசிரியரிடம் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும்?

## பயிற்சி

1. தெரிந்து கொள்க:

| | | |
|---|---|---|
| எண்ண வேண்டும் | — | கருதவேண்டும் |
| தகப்பனுர் | — | தந்தையார் |
| கடைப்பிடிக்க | — | மேற்கொள்ள |
| நேசிக்க | — | அன்பு பாராட்ட |
| ஏளனம் | — | கேலி |
| கருத்தாய் | — | கவனமாய் |

2. எதிர்ச் சொற்கள்:

தோல்வி × வெற்றி
ஏழை × பணக்காரன்

## இலக்கணம்

கீழுள்ளவற்றில் பெயர்ச் சொற்களையும் வினைச் சொற்களையும் பிரித்து எழுதுக:

1. தாமஸ் கடிதம் எழுதினர்.
2. சுந்தரம் பரீட்சையில் தேறினன்.
3. என் வீடு கோவில் அருகில் இருக்கிறது.
4. கந்தன் இன்று பள்ளிக்கூடம் வரவில்லை.
5. ஆசிரியர் பாடம் கற்பிக்கிருர்.
6. மாணவர்கள் விளையாடுகிருர்கள்.

# 15. உப்பு




1. சுவை ஆறு வகைப்படும். அவற்றுள் உவர்ப்பு என்பதும் ஒன்று. உவர்ப்பு என்னும் சுவை உப்பு என்னும் பொருளில் உள்ளது. உப்பு இடாத உணவுப் பொருள்களை நாம் விரும்புவது இல்லை. 'உப்பு இல்லாப் பண்டம் குப்பையிலே' என்பது நம் நாட்டுப் பழமொழி. அந்த உப்பு எங்கிருந்து, எப்படிக் கிடைக்கிறது?

2. சுத்தமான உப்பு வெண்மை நிறமாய் இருக்கும். கடைகளில் பழுப்பு நிறமுள்ள உப்பும் இருக்கும். உப்பில் கலந்திருக்கும் அழுக்கினுல் அதற்குப் பழுப்பு நிறம் உண்டா

கிறது. தண்ணீரில் உப்பைக் கரைத்தால் இந்த அழுக்கைப் பிரித்து விடலாம்.

3. உப்பு பெரும்பாலும் கடல் நீரிலிருந்து எடுக்கப்படுகிறது. கடல் நீரைச் சிறு கால்வாய்கள் வழியாகப் பாத்திகளில் பாய்ச்சுவார்கள். அந்நீர் முழுவதும் வற்றின பின்பு, உப்பு, சிறு சிறு கற்களாய்ப் பாத்திகளில் படிந்திருக்கும். இவற்றை உலர்த்திக் குவித்து வைப்பார்கள். உப்புச் செய்யப்படும் இடத்திற்கு **உப்பளம்** என்று பெயர்.

4. சில இடங்களில் நிலத்தை வெட்டியும் உப்பு எடுக்கிறுர்கள். இந்த உப்பு, மண்ணேடும் வேறு பல பொருள்களோடும் கலந்திருக்கும். அப்பொருள்களைப் பிரித்து, சுத்தம் செய்து, உப்பு எடுப்பார்கள்.

5. நமது உடல் வளர்ச்சிக்கு உப்பு மிகவும் முக்கியமானது. உப்பு ஜீரண சக்தியை அதிகப்படுத்தும். உப்புச் சத்திஞல் நம் உடல் எலும்புகள் உறுதி பெறுகின்றன. உப்பு, உணவுப் பொருள்களைக் கெடாமல் வைத்திருக்கப் பயன்படுகிறது. உப்புச் சேர்க்காவிடில் உணவுப் பொருள்கள் கெட்டுவிடும். உப்புச் சேர்த்த ஊறுகாய் நெடுநாட்கள் கெடாமல் இருக்கும்.

## சொற்களஞ்சியம்

| | | |
|---|---|---|
| பழமொழி | வழங்குகிறது | பழுப்பு |
| கலந்திருக்கும் | அழுக்கினால் | பிரித்து |
| கால்வாய் | பாத்தி | வற்றின |
| உலர்த்தி | உப்பளம் | வளர்ச்சி |
| ஜீரணம் | சக்தி | எலும்பு |
| உறுதி | ஊறுகாய் | கெடாமல் |

## கேள்விகள்

1. உப்பின் அவசியம் யாது?
2. சில வகை உப்பு ஏன் பழுப்பு நிறமாய் இருக்கிறது?
3. கடல் நீரிலிருந்து எவ்வாறு உப்பு எடுக்கப்படுகிறது?
4. 'உப்பளம்' என்றால் என்ன?
5. உப்பினால் ஏற்படும் பயன்கள் யாவை?

## பயிற்சி

1. உப்பே தன் கதையைச் சொல்வது போலச் சுருக்கமாக எழுதுக.

2. உங்கள் ஊருக்கு அருகில் உப்பளம் இருந்தால் ஒருமுறை சென்று பாருங்கள்.

3. கோடிட்ட இடங்களை நிரப்புக:

(1) சுத்தமான உப்பு —— நிறமாய் ——.

(2) கடல் —— சிறு —— வழியாகப் பாத்திகளில் விடுவார்கள்.

(3) நிலத்தை —— உப்பு எடுக்கப்படுகின்றது.

(4) உப்புச் சத்தினால் நம் —— —— உறுதி பெறுகின்றன.

# 16. நீர் நிலைகள்

1. நாம் நமக்கு வேண்டும் தண்ணீரை ஆறு, ஏரி, குளம், கிணறு, குழாய் இவற்றி லிருந்து பெறுகிறோம். இவற்றுள் ஆறு, கால்வாய், ஓடை இவைகளில், நீர் நிலையாக நில்லாமல் ஓடிக்கொண்டே இருக்கின்றது. ஆனால் ஏரி, குளம், கிணறு, குட்டை இவற் றில் உள்ள தண்ணீர் அவ்வாறு ஓடாமல், நிலை யாக இருக்கிறது. நிலையாய்த் தேங்கி நிற்கும் இவைகளை **நீர் நிலைகள்** என்று சொல்லு கிறோம்.

2. நீர் நிலைகளுள் மிகவும் பெரியது கடல். கடல் நீர் உவர்ப்பானது; அதனால் கடல் நீரை நாம் பயன்படுத்துவது இல்லை. நாம் பயன் படுத்தும் நீர் நிலைகளுள் பெரியது **ஏரி**. ஏரியிலிருந்து **கால்வாய்கள்** வெட்டி வயல்களுக்கு நீர் பாய்ச்சுவார்கள். சில ஏரி களுக்குப் பெரிய ஆறுகளிலிருந்து கால்வாய் கள் வழியே நீரைக் கொண்டு வந்து தேக்கி வைப்பார்கள். பெரும்பாலும் ஏரிகள் மழை நீராலேயே நிரம்புகின்றன.

3. கிராமங்களில் **குளங்கள்** இருக்கும். சிறிய குளத்திற்குக் **குட்டை** என்று பெயர். இவையும் நீர் தேங்கி நிற்கும் நிலைகளாகும்.

இவை மழை நீரால் நிரம்பும். வாய்க்கால் நீரைப் பாய்ச்சி, குளங்களை நிரப்பிக் கொள் வதும் உண்டு. கிராமங்களில் உள்ள மக்கள் குளங்களில் குளிப்பார்கள்; துணி துவைப் பார்கள். சில குளங்களுக்குக் காவல் ஏற் படுத்தி யிருப்பார்கள். காவல்காரர் குளத்து நீரை யாரும் அசுத்தம் செய்யாதவாறு கவனிப் பார். குளத்து நீரைக் குடி நீராகவும் உபயோ கிப்பது உண்டு. குட்டைகளில் உள்ள நீர் அசுத்தமாக இருக்கும்.



4. நம் வீடுகளில் **கிணறுகள்** இருக்கின் றன. கிணற்று நீரையே நாம் நம் வீடுகளில் உபயோகித்துக் கொள்கிறோம். தோட்டங்களில் சில பெரிய கிணறுகள் உண்டு. இந்தக்

கிணற்று நீரை ஏற்றம் கொண்டு இறைத்துத் தோட்டங்களுக்குப் பாய்ச்சுவார்கள். மாடுகள் பூட்டிய கபிலை ஏற்றம் மூலமாகவும் தண்ணீர் இறைப்பார்கள். நீ தோட்டக் கிணறு பார்த்திருக்கிறாயா?

5. நகரங்களில் குழாய் வசதி இருக்கிறது. குழாயின் பிடியைத் திருப்பி விட்டால் தண்ணீர் கொட்டுகிறது. ஓரிடத்தில் பெரிய தொட்டி அமைத்து, தண்ணீரைத் தேக்கி, சுத்தம் செய்து வைத்திருப்பார்கள். அந்தத் தொட்டியிலிருந்து குழாய்கள் மூலம் நகரத்தின் பல பாகங்களுக்கும் தண்ணீர் கொண்டு செல்லப்படும்.

6. நீர்நிலைகள் நமக்கு மிகவும் பயன் படக் கூடியவை. நாம் அவற்றைச் சுத்தமாக வைத்துக்கொள்ள வேண்டும். கிணற்று நீரில் இலை, சருகு முதலியவை சேராதவாறு கவனித்துக் கொள்ள வேண்டும். அவற்றால் நீர் கெட்டுவிடும்.

சொற்களஞ்சியம்

| | | |
|---|---|---|
| குழாய் | நிலை | பாய்ச்சு |
| நிரம்புகின்றன | நிரப்பி | துவைப்பார்கள் |
| குடிநீர் | இறைத்து | மூலம் |
| வசதி | சருகு | பெறுகிறோம் |
| தேக்க | காவல்காரர் | நகரம் |

## கேள்விகள்

1. நீர் நிலைகள் என்று எவற்றைக் கூறுகிறோம்?

2. ஏரிக்கு நீர் எங்கிருந்து கிடைக்கிறது?

3. குளங்களைக் கிராம மக்கள் எவ்வாறு பயன் படுத்துகிறார்கள்?

4. குளத்திற்கு ஏன் காவல்காரரை நியமித்திருக் கிறார்கள்?

5. தோட்டக் கிணறுகளிலிருந்து எப்படி நீர் பாய்ச்சுகிறார்கள்?

6. குழாய்க்கு நீர் எங்கிருந்து வருகிறது?

## இலக்கணம்

1. ஒருமை, பன்மைச் சொற்களை வெவ்வேறாக எடுத்து எழுதுக:

காய்கள், பழம், மலைகள், செடிகள், கோயில், கிணறு, கொடி, இலைகள், ஆறு, ஏரிகள், குட்டை, மக்கள்.

2. பின்வரும் சொற்களைப் பொருத்தமான கட்டங் களில் அமைத்து எழுதுக:

காய்கள், பாய்ச்சினான், கிணறு, குட்டைகள், கிரா மம், குளித்தாள், முருகன், வைத்தான், வள்ளி, சிறுமி-கள், மாணவன், ஏற்றம், குழாய், தொட்டி, சருகுகள்.

| பெயர்ச் சொல் | வினைச் சொல் | ஒருமை | பன்மை | ஆண் பால் | பெண் பால் |
|---|---|---|---|---|---|
| | | | | | |

# 17. கோழி



## சேவற் கோழி

1. கோழி கோழி வாவா ;
   கொக்கோ கோ என்றுவா !
   கோழி ஓடி வாவா ;
   கொண்டைப் பூவைக் காட்டுவா.

2. குத்திச் சண்டை செய்யவோ ?
   குப்பை கிண்டி மேயவோ ?
   கத்தி போலுன் கால்விரல்
   கடவுள் தந்து விட்டனர்.

3. காலை கூவி எங்களைக்
   கட்டில் விட்டெழுப் புவாய் ;
   வேலை செய்ய ஏவுவாய் ;
   வெற்றி கொண்ட கோழியே !

## பெட்டைக் கோழி

4. கோழி கோழி வாவா ;
கூரை விட்டி றங்கிவா ;
கோழி முட்டை இடவா ;
கூட்டில் அடை காக்கவா !

5. பெட்டைக் கோழி வாவா ;
பிள்ளை களைக் கூட்டிவா.
குட்டை நெல்லைக் கொட்டினேன்,
கொத்திக் கொத்தித் தின்னவா !

6. வஞ்சமாய்ப் பருந்(து) அதோ !
வானில் வட்டம் போடுது ;
குஞ்ச ணைத்துக் காப்பாயோ ;
கூட்டில் கொண்டு சேர்ப்பாயே ?

—கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை

### சொற்களஞ்சியம்

| | | |
|---|---|---|
| எழுப்புவாய் | ஏவுவாய் | அடைகாக்க |
| கொட்டினேன் | வஞ்சம் | பருந்து |
| வானில் | அணைத்து | சேர்ப்பாய் |

### கேள்விகள்

1. சேவலைக் கூப்பிட்டு எதைக் காட்டச் சொல்கிறார் ?
2. அதன் கால்விரல் எப்படி இருக்கும் ?
3. காலையில் சேவல் என்ன செய்கிறது ?

4. பெட்டைக் கோழியை எதற்காக அழைக்கிருர் ?

5. வானத்தில் என்ன காணப்படுகிறது ?

6. அது என்ன செய்கிறது ?

7. அதைக் கண்டு பெட்டைக் கோழியை என்ன செய்யச் சொல்கிருர் ?

## பயிற்சி

1. ஒவ்வொரு பாட்டின் கருத்தையும் தெளிவாக எழுதுக.

(உ - ம்.) கோழி ! கொக்கோ கோ என்று கூவி வா ; வந்து எனக்கு உன் பூப் போன்ற கொண்டையைக் காட்டு.

2. வாக்கியங்களில் அமைத்து எழுதுக :

குப்பை, கொண்டை, கத்தி, கூவி,
எழுப்பு, முட்டை, கொட்டினேன்.

# 18. கூடை முடைதல்



1. நகரங்களில் பலவிதமான கைத் தொழிற் சாலைகள் இருக்கின்றன. நூல் நூற்கும் ஆலை, நெசவு ஆலை, சர்க்கரை ஆலை போன்ற பலவகையான தொழிற்சாலைகள் இருக்கின்றன. இந்தத் தொழிற்சாலைகளில் செய்யப்படும் பொருள்கள் எல்லாம் இயந்திரங்களின் உதவியினால் செய்யப்படுகின்றன. இவ்வாறு இயந்திர உதவி இல்லாமல் கையினாலேயே செய்யப்படும் தொழிலுக்குக் **கைத் தொழில்** என்பது பெயர்.

2. கைத்தொழில்களில் கூடை முடைதலும் ஒரு தொழில் ஆகும். ஓலைகளாலும்,

மூங்கில்களாலும், பிரம்புகளாலும் கூடைகள் முடையலாம். தென்னை, பனை, ஈந்து முதலிய மரங்களின் ஓலைகளால், பெட்டி, கூடை முதலியவற்றை முடையலாம். அவைகளுக்கு வர்ணம் பூசினால் அவை பார்ப்பதற்கு அழகாய் இருக்கும். ஓலைக் கூடைகள் நீண்டநாள் பயன்படமாட்டா. பிரம்புக் கூடைகள் உறுதியாய் இருக்கும் ; நீண்டநாள் உழைக்கும்

3. பசுமையான மூங்கில்களை வெட்டி வந்து, அவற்றைக் கத்தியினால் பிளப்பார்கள். வேண்டிய அளவுக்குத் தகுந்தாற்போல் அப் பிளவுகளைக் கனமாகவும் இலேசாகவும் சீவுவார்கள். அவற்றால் பலவிதமான கூடைகள் முடைவார்கள்.

4. கூடை முடைபவர் முதலில் அடிப் பாகத்தை முடைவார். எந்த உருவத்தில் வேண்டுமோ அதற்குத் தகுந்தாற்போல் கூடையின் அடிப்பாகத்தை அமைப்பார். முதலில் கனமான பிளவுகளை எடுத்துக் கீழே பரப்புவார் ; அதன்பின், மெல்லிய பிளவுகளைக் குறுக்கே கொடுத்து முடைவார். கடைசியில் மூலைகளை மடித்துக் கூடை ஆக்குவார்.

5. கூடைகளில் வட்டக் கூடை, சதுரக் கூடை, வாய் அகன்ற கூடை, வாய் குறுகிய கூடை என்று பலவகைகள் உள்ளன. பிரம்பி

னு லும் இவ்வகைக் கூடைகளை முடைவார்கள். மூங்கிற் பிளவுகளினுல் பாய்களும், தட்டி களும், கோழிக் கூண்டுகளும் செய்வதுண்டு. காய்கறிகள், பழங்கள் இவற்றை வைத்துக் கொள்ளத் தூக்குக் கூடைகளும் செய்வார்கள்.

6. புத்தகப் படிப்புடன் கைத்தொழில் பயிற்சியும் நமக்கு வேண்டும். அதனுல் சில பள்ளிக்கூடங்களில் கூடை முடைதல், பிரம்புச் சாமான்கள் செய்தல், பாய் பின்னுதல் ஆகிய தொழில்கள் கற்றுக் கொடுக்கப் படுகின்றன. மாணவர்களாகிய நீங்கள் ஏதேனும் கைத் தொழில் ஒன்று கற்றுக்கொண்டால் அதனுல் நன்மை அடையலாம்.

சொற்களஞ்சியம்

| | | |
|---|---|---|
| தொழிற்சாலை | நூற்கும் | ஆலை |
| சர்க்கரை | இயந்திரம் | கைத்தொழில் |
| முடைதல் | மூங்கில் | பிரம்பு |
| வர்ணம் | பூசு | உறுதி |
| கனம் | இலேசு | சீவி |
| பிளவு | அமைப்பார் | பரப்பி |
| மடித்து | ஆக்குவார் | சதுரம் |
| தூக்கு | அடைவீர்கள் | ஏதேனும் |
| நெசவு ஆலை | ஈந்து | பிளப்பார்கள் |
| உருவம் | குறுக்கே | தட்டி |

## கேள்விகள்

1. எவற்ருல் கூடைகள் முடையலாம் ?
2. மூங்கிலால் கூடை முடைவது எப்படி ?
3. கூடைகளில் சில வகைகளைக் கூறுக.
4. கைத்தொழில் என்ருல் என்ன ?

## பயிற்சி

1. கோடிட்ட இடங்களில் தகுந்த சொற்களை எழுதுக :

(1) ஓலைக் கூடைகள் —— பயன்பட மாட்டா.
(2) பிரம்புக் கூடைகள் —— இருக்கும்.
(3) முதலில் கூடையின் —— முடைவார்கள்.
(4) கடைசியில் —— —— கூடை ஆக்குவர்.

2. உச்சரிப்பைக் கவனிக்க :

(1)

| பழம் | கழி | பாழ் |
|---|---|---|
| நிலம் | எலி | பால் |
| நீளம் | களி | தாள் |

(2) பழம், பலம், மணம், மனம், மழை, மலை, குளம், குலம்—இச்சொற்களின் உச்சரிப்பைக் கவனிக்க. ல, ள, ழ, ண, ன இவற்றின் உச்சரிப்பைத் தெளிவாகத் தெரிந்துகொள்க.

# 19. பழமொழிகள்

1. அகல உழுவதை ஆழ உழு.
2. அகத்தின் அழகு முகத்தில் தெரியும்.
3. அடாது செய்பவன் படாது படுவான்.
4. ஆடிப் பட்டம் தேடி விதை.
5. ஆத்திரக் காரனுக்குப் புத்தி மட்டு.
6. தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும்.
7. உப்பிட்டவரை உள்ளளவும் நினை.
8. உலை வாயை மூடலாம்; ஊர் வாயை மூட முடியுமோ?
9. எறும்பு ஊரக் கல்லும் தேயும்.
10. ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையுமோ?
11. கந்தை ஆனாலும் கசக்கிக் கட்டு.
12. காலை மாலை நூலை ஓது.
13. பழகப் பழகப் பாலும் புளிக்கும்.
14. பணம் இல்லாதவன் பிணம்.
15. பாராத பயிர் பாழ்.
16. பேராசை பெரு நஷ்டம்.
17. முயற்சி உடையார் இகழ்ச்சி அடையார்.
18. யானை வரும் பின்னே, மணியோசை வரும் முன்னே.

19. நீர் உயர நெல் உயரும்.

20. நோயற்ற வாழ்வே குறையற்ற செல்வம்.

## சொற்களஞ்சியம்

| | | | |
|---|---|---|---|
| ஆழ | உழு | அகம் | சுடுகாடு |
| புத்தி | மட்டு | தொட்டில் | உலை |
| தேயும் | கந்தை | கசக்கி | வளையாதது |
| பாழ் | பிணம் | முயற்சி | இகழ்ச்சி |
| வாழ்வே | செல்வம் | பாராத | பேராசை |

## கேள்விகள்

1. எவ்வாறு உழுவது நன்மை தரும்?
2. எப்பொழுது விதை விதைக்க வேண்டும்?
3. பயிர் எப்பொழுது பாழாகும்?
4. எப்பொழுது நெல் உயரும்?
5. யார் பெரு நஷ்டம் அடைவார்?
6. குறையற்ற செல்வம் எது?

## பயிற்சி

1. உனக்குத் தெரிந்த வேறு சில பழமொழிகளைச் சேர்த்து எழுதி வைத்துக் கொள்க.

2. உச்சரிப்பைக் கவனிக்க.

| | | | |
|---|---|---|---|
| எறும்பு | குறுகிய | வெறுப்பு | ஏறி |
| கரும்பு | குருடன் | விருப்பு | ஏரி |
| துரும்பு | திருகு | நெருப்பு | கீரி |

# 20. தீபாவளி



1. தீபாவளி என்பது ஒரு பண்டிகை. அதை இந்துக்கள் சிறப்பாகக் கொண்டாடுகிருர்கள். இந்தப் பண்டிகை வருடந் தோறும் ஐப்பசி மாதத்தில் வரும். பண்டிகை அன்று இந்துக்கள் விடியற்காலையில் எழுந்து எண்ணெய் தேய்த்து நீராடுவார்கள்; புதிய ஆடைகளை அணிவார்கள். சிறுவர்கள் மத்தாப்பு, பட்டாசு, வாணங்கள், வெடிகள் முதலியவைகளைக் கொளுத்தி மகிழ்வார்கள். அன்று எல்லா வீடுகளிலும் பலவிதமான தின்பண்டங்கள் செய்து உண்டு மகிழ்வார்கள்.

2. தீபாவளி, சிறுவர்களுக்கு மிகவும் மகிழ்ச்சிதரும் பண்டிகையாகும். தந்தை,

குழந்தைகளுக்கு விருப்பமான உடைகளை வாங்கித் தருவார். தாய், பல வகையான தின்பண்டங்களைச் செய்து தருவார். ஆனால் மத்தாப்பு கொளுத்துவதிலும் பட்டாசு சுடுவதிலுமே சிறுவர் அதிக மகிழ்ச்சி கொள்வார்கள்.

3. முன்னாளில் திருமால் கண்ணனாக அவதாரம் செய்திருந்தார். கண்ணபிரான் துவாரகையை ஆண்டு வந்தார். அப்பொழுது நரகாசுரன் என்னும் கொடிய அரக்கன் ஒருவன் மக்களை மிகவும் துன்புறுத்தி வந்தான்; தவம் செய்யும் முனிவர்களை வருத்தி வந்தான். அவனுடைய கொடுமைகளைத் தாங்காமல் அவர்கள் எல்லோரும் கண்ணபிரானிடம் முறையிட்டுக் கொண்டார்கள். கண்ணபிரான் அவர்களைக் காப்பாற்றுவதாக வாக்களித்தார்.

4. கண்ணன், நரகாசுரனை எதிர்த்துப் போர் புரிந்தார். அவனும் மிகவும் கடுமையாகச் சண்டை செய்தான். கண்ணபிரான் தன் சக்கராயுதத்தால் அவனைக் கொன்றார்.

5. நரகாசுரன் உயிர் நீங்கும் முன் கண்ணபிரானை ஒரு வரம் வேண்டினான். தான் இறந்த தினத்தை மக்கள் ஒரு பண்டிகையாகக் கொண்டாட வேண்டும் என்பதே அவன் வேண்டின வரம். கண்ணபிரான் அவ்வாறே

அவனுக்கு அந்த வரத்தை அளித்தார். அன்று முதல் மக்கள் அவன் இறந்த நாளைத் தீபாவளிப் பண்டிகையாகக் கொண்டாடி வருகிருர்கள்.

## சொற்களஞ்சியம்

| | | |
|---|---|---|
| இந்துக்கள் | பண்டிகை | விடியற்காலை |
| தேய்த்து | முழுகுவார்கள் | அணிவார்கள் |
| மத்தாப்பு | பட்டாசு | வாணங்கள் |
| வெடிகள் | கொளுத்தி | முன்னுளில் |
| கொடிய | அரக்கன் | தவம் |
| முனிவர்கள் | வருத்தி | கொடுமை |
| முறையிட்டு | காப்பாற்றுவதாக | வாக்களித்தார் |
| எதிர்த்து | போர் | புரிந்தார் |
| கொன்ருர் | வரம் | உயிர் |
| நீங்கும் முன் | திருமால் | அவதாரம் |

## கேள்விகள்

1. தீபாவளி அன்று இந்துக்கள் என்ன செய்வார்கள் ?
2. அரக்கனைக் கண்ணபிரான் ஏன் கொன்ருர் ?
3. அரக்கன் வேண்டிய வரம் யாது ?
4. இந்துக்கள் ஏன் தீபாவளியைக் கொண்டாடுகிருர்கள் ?

## பயிற்சி

1. வாக்கியங்களில் அமைத்து எழுதுக :

வருடந்தோறும், நீராடுவார்கள், விருப்பமான, முன்னுளில், காப்பாற்றுவதாக, அளித்தார்.

2. தெரிந்துகொள்க :

| | |
|---|---|
| தருவார் | — கொடுப்பார் |
| துன்புறுத்தி | — வருத்தி |
| போர்புரிந்தான் | — சண்டை செய்தான் |
| அளித்தார் | — கொடுத்தார். |

3. உச்சரிப்பைக் கவனிக்க :

| | | |
|---|---|---|
| பண்டிகை | முன்னாள் | பந்து |
| எண்ணெய் | துன்பம் | இந்த |
| பண்டம் | கொன்றார் | எழுந்து |
| ஆண்டார் | அவன் | குழந்தை |

4. நன்றாக உச்சரித்துப் படிக்க :

(1) கண்ணன் வெண்ணெய் தின்றான்.
(2) எண்ணெய்க் கிண்ணம் வழுக்கி விழுந்தது.
(3) புலி புளியமரத்தில் ஏறுமா ?
(4) ஏரி நிரம்பி வழிந்து ஓடிற்று.
(5) பழம் நழுவிப் பாலில் விழுந்தது.
(6) விறகுவெட்டி வரகு வாங்கினான்.
(7) கந்தன் கன்று வாங்கச் சந்தைக்குச் சென்றான்.
(8) கரும்பு இருக்கும் இடத்தில் எறும்பு இருக்கும்.
(9) எலி வளையில் வசிக்கும்.
(10) புலி வலையில் அகப்பட்டுக் கொண்டது.

# 21. பெருமை பாராட்டாத பெரியார்




**1.** 'தன் கையே தனக்குதவி' என்பது பழமொழி. நம்மால் முடிந்த வரையில் நம் வேலைகளை நாமே செய்துகொள்ளவேண்டும். நம் வேலைக்கு அயலார் உதவியை எதிர்பார்க்கக் கூடாது. சிலர் பெருமைக்காகத் தம் வேலைகளை அயலாரைச் செய்யச் சொல்வார்கள். தங்கள் வேலையைக்கூடத் தாங்களே செய்வது இழிவு என்பது அவர்கள் எண்ணம். பெரியவர்கள் அப்படி எண்ணமாட்டார்கள்.

2. வங்காளத்தில் **வித்தியாசாகரர்** என்னும் பெரியார் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் ஒரு பெரிய அறிஞர். நாடு முழுதும் அவர் புகழ் பரவியிருந்தது. ஒரு சமயம் அவர் புகைவண்டியில் மிதுனபுரிக்குச் சென்று கொண்டிருந்தார். வண்டியில் அவரோடு மாணவன் ஒருவன் அமர்ந்திருந்தான். அவன் மேல்நாட்டு முறையில் ஆடம்பரமான உடை அணிந்திருந்தான். வித்தியாசாகரர் மிகவும் எளிய உடையே உடுத்தியிருந்தார். அந்த மாணவன் அவரை ஒரு கூலியாள் என்று எண்ணினான். அவன் அவருடன் பேசவும் விரும்பவில்லை.

3. வண்டி மிதுனபுரியை அடைந்ததும் வித்தியாசாகரர் இறங்கினார்; அந்த மாணவனும் இறங்கினான். மாணவனிடம் ஒரு சிறு பெட்டி இருந்தது. மாணவன் அதைத் தானே தூக்கிச் செல்ல விரும்பவில்லை. அவன் அதை எடுத்துச் செல்வதை இழிவு என்று நினைத்தான்; அதற்காக ஒரு கூலியாளைத் தேடினான். அங்கு யாரும் அகப்படவில்லை. அவன் வெறுப்போடு அங்கும் இங்கும் அலைந்தான்.

4. வித்தியாசாகரர் அவனைக் கவனித்தார். அவர் அவன் கருத்தை அறிந்துகொண்டார்; அவனுக்குப் புத்தி புகட்ட எண்ணினார்.

அவர் அந்த மாணவன் அருகில் சென்ருர் ; அந்தப் பெட்டியைத் தான் எடுத்து வருவதாகக் கூறினுர். மாணவன் பெட்டியை அவரிடம் கொடுத்தான். அவர் அவனைப் பின்தொடர்ந்து சென்ருர். வீட்டை அடைந்ததும் மாணவன் அவருக்குக் கூலி கொடுக்க வந்தான் ; அவர் கூலி வாங்க மறுத்துவிட்டார். ஆனுல், அந்த மாணவனுடைய பெயரையும், விலாசத்தையும் அறிந்துகொண்டார்.

5. மறுநாள் அம்மாணவனுக்கு ஓர் அழைப்புக் கடிதம் வந்தது. அது வித்தியா சாகரருக்கு அந்த நகரத்தார் அளிக்கும் விருந்துக்கு அழைப்பு. மாணவன் ஆடம்பர உடைகளுடன் விருந்துக்குச் சென்ருன். அங்கு அவன், தன் பெட்டியைத் தூக்கி வந்த வர் பூமாலைகள் சூடி மேடையில் அமர்ந்திருப் பதைக் கண்டான் ; பலர் அவரைப் புகழ்ந்து பேசுவதைக் கேட்டான் ; அவரே வித்தியா சாகரர் என்று அறிந்து திடுக்கிட்டான் ; அவரை நேரே பார்க்கவும் அஞ்சி வெட்கம் அடைந்தான்.

6. வித்தியாசாகரர் அந்த மாணவனைப் பார்த்து விட்டார். அவர் அவனை அன்போடு அருகில் அழைத்தார் ; "அப்பா, நமது வேலையை நாமே செய்துகொள்ள வெட்கப்படக்

கூடாது. அதில் அவமானம் ஒன்றும் இல்லை. இதை நீ உணரவேண்டும்'' என்று கூறினர். அவன் அவரை வணங்கி, தன்னை மன்னிக்கும் படி வேண்டினன். அன்று முதல் அம் மாண வன் வீண் பெருமையை ஒழித்து, நல்ல முறை யில் நடந்து வந்தான்.

## சொற்களஞ்சியம்

| | | | |
|---|---|---|---|
| அழைப்பு | அவமானம் | புகைவண்டி | எதிர்பார்க்க |
| ஆடம்பரம் | பாராட்டி | பெருமை | தொடர்ந்து |
| வெறுப்பு | இழிவு | வங்காளம் | புத்தி |
| புகட்ட | அறிஞர் | எளிய | மேல்நாட்டு |
| விலாசம் | மேற்கொண்டு | பரவி | எளியவர் |
| அயலார் | அலைந்தான் | தூக்கி | கருத்தை |
| மறுத்து | அவ்வாறு | அஞ்சி | வெட்கம் |
| | விலாசம் | திடுக்கிட்டான் | |

## கேள்விகள்

1. வித்தியாசாகரர் யார்?

2. கல்லூரி மாணவன் அவருடன் ஏன் பேச விரும்பவில்லை?

3. கூலியாள் அகப்படாதபொழுது மாணவன் கருதியது என்ன?

4. மாணவனுக்குப் புத்தி புகட்ட வித்தியாசாகரர் எப்படி முன்வந்தார்?

5. விருந்துக்குச் சென்ற மாணவன் ஏன் திடுக் கிட்டான்?

6. மாணவனுக்கு வித்தியாசாகரர் புகட்டிய நீதி என்ன?

# 22. கடிதம் சொல்லிய கதை




1. என்னைச் சுமந்து சென்றவர் ஒரு வீட்டு வாசலில் நின்றார்; "சுந்தரம்" என்று கூப்பிட்டார். வீட்டிற்குள்ளிருந்து சிறுவன் ஒருவன் ஓடி வந்தான். தபால்காரர் என்னை எடுத்துச் சுந்தரத்தின் கையில் கொடுத்து விட்டுப் போய்விட்டார். அந்தச் சிறுவன் என்மேல் எழுதியிருந்த செய்திகளைப் படித்தான். விடுமுறையைக் கழிக்கப் பாளையங் கோட்டைக்கு வருமாறு அவன் மாமன் என் மேல் எழுதியிருந்தாராம். நான் யாரென்று தெரிந்து கொண்டீர்களா? நான் ஒரு தபால் கடிதம்.

2. நான் முதலில் பாளையங்கோட்டையில் ஒரு தபால் நிலையத்தில் இருந்தேன். முக் காலணுக் கொடுத்து என்னை ஒருவர் வாங் கினர்; என்மேல் ஏதேதோ எழுதி, தபால் நிலையத்தில் இருந்த தபால் பெட்டிக்குள் என்னைப் போட்டுவிட்டுப் போய்விட்டார். தபால் பெட்டிக்குள் என் சகோதரர்கள் பலர் இருந்தார்கள். சிறிது நேரத்தில் ஒரு தபால் சேவகன் அந்தப் பெட்டியைத் திறந்தான். அவன் என்னையும் என்னைச் சேர்ந்தவர்களை யும் எடுத்துக்கொண்டு தபால் நிலையத்திற்குள் சென்று விட்டான்.

3. தபால் நிலையத்தில் என்னை ஒரு மேசை மேல் போட்டார்கள். பிறகு என்மேல் ஒரு குத்து விழுந்தது; என்மேல் முத்திரை குத்துகிறுர்கள் என்று பிறகு அறிந்து கொண் டேன். அதன் பிறகு, என்னையும் மற்றவர் களையும் ஒரு பையில் போட்டுக் கட்டினர்கள்.

4. நான் அடங்கியிருந்த பையை ஒரு வண்டியில் போட்டுக்கொண்டு புகைவண்டி நிலையத்தை அடைந்தார்கள். புகைவண்டித் தொடரில் ஒரு வண்டியில் தபால் சேவகன் நான் இருந்த பையைக் கொடுத்துவிட்டுச் சென்று விட்டான். அந்த வண்டியில் இருந்த சிலர் பையைப் பிரித்து என்னையும் மற்றவர்

களையும் எடுத்தார்கள். அங்குப் புருக் கூடு போலப் பல சிறு அறைகள் இருந்தன. திருச்சிராப்பள்ளிக்குச் செல்லவேண்டிய கடிதங்களுடன் என்னை ஒரு சிறு அறையில் போட்டார்கள். புகைவண்டி திருச்சிக்கு வந்து சேர்ந்தது. அங்கு என்னையும், திருச்சியில் சேரவேண்டிய மற்றக் கடிதங்களையும் ஒரு பையில் போட்டுக் கட்டிவிட்டார்கள். அந்தப் பையை ஒரு தபால் சேவகன் எடுத்துப் போனான். இப்பொழுது நான் திருச்சிராப்பள்ளி தபால் நிலையத்தை அடைந்துவிட்டேன்.

5. அங்கு நான் இருந்த பையைத் திறந்தார்கள். மறுபடியும் என்மேல் ஒரு குத்து விழுந்தது. நான் புறப்பட்ட இடத்திலும், நான் வந்து சேர்ந்த இடத்திலும் ஒவ்வொரு முறை முத்திரை இடுவார்களாம். அதன் பின் நான் ஒரு தபால்காரர் கையை அடைந்தேன். அவர் என்னையும் என்போன்ற மற்றக் கடிதங்களையும் எடுத்துக்கொண்டு வீதி வீதியாகச் சென்றார். அவர்தான் இச்சிறுவனிடம் என்னைக் கொடுத்தார். பாளையங்கோட்டையில் வசிக்கும் மாமன் இச்சிறுவனுக்கு எழுதியிருக்கிறார் என்று இப்பொழுதுதான் நான் தெரிந்துகொண்டேன். சுந்தரம் என்மேல்

எழுதி யிருந்தவைகளைத் திரும்பத் திரும்பப் படித்தான்; மகிழ்ந்து கூத்தாடினன். என் வரவால் அவன் மகிழ்ச்சி அடைந்தான்.

## சொற்களஞ்சியம்

| | | |
|---|---|---|
| சுமந்து | சேர்ந்தவர் | திரும்ப |
| விடுமுறை | கழிக்க | நிலையம் |
| ஏதேதோ | வரவால் | உணர்ந்து |
| முத்திரை | கூத்தாடினன் | சகோதரர்கள் |
| சேவகன் | தபால் | பிரித்தார்கள் |
| சென்றவர் | குத்து | இடுவார்கள் |

## கேள்விகள்

1. முதன் முதல் தபால் கடிதம் எங்கு இருந்தது?

2. கடிதம் தபால் நிலையத்திலிருந்து எங்குக் கொண்டு செல்லப்பட்டது?

3. புகை வண்டியில் அக்கடிதத்தை என்ன செய்தார்கள்?

4. கடிதம் திருச்சிராப்பள்ளித் தபால் நிலையத்தை எப்படி அடைந்தது?

5. கடிதத்தின் மேல் எத்தனை முறை முத்திரை இடுவார்கள்?

## பயிற்சி

1. வாக்கியங்களில் அமைத்து எழுதுக:

விடுமுறை, முக்காலணு, ஏதேதோ, மறுபடியும், திரும்பத் திரும்ப, செய்திகள்.

# 23. முயலின் தந்திரம்



1. ஒரு மலையோரத்தில் முயல் ஒன்று வசித்து வந்தது. பல நாட்களாக மழை பெய்யாததால் அங்குப் பயிர் பச்சைகள் எல்லாம் உலர்ந்து போய்விட்டன. முயலுக்கு ஆகாரமான புல் பூண்டுகள் அங்குக் கிடைக்கவில்லை. ஆகையால், முயல் அவ்விடத்தினின்றும் அகன்று, புல் உள்ள இடத்திற்குச் செல்ல எண்ணியது. முயல் மலையின் மேலிருந்து பார்த்தது. வெகு தூரத்திற்கு அப்பால் பசும் புல்வெளி இருப்பதைக் கண்டது. அவ்விடத்திற்குச் செல்ல ஓர் ஆற்றைக் கடக்க வேண்டும். அங்குச் செல்ல முயல் முடிவு செய்தது; அதை நோக்கிக் குதித்துச் சென்றது; ஆற்றங்கரையை அடைந்தது.

2. ஆற்றில் நீர் நிறைய ஓடிக்கொண் டிருந்தது. ஆறு மிகவும் அகலமாகவும் ஆழ மாகவும் இருந்தது. அதில் முதலைகள் மிகுதி யாக வசித்து வந்தன. அந்த ஆற்றை எப்படித் தாண்டிச் செல்வது என்று முயல் யோசனை செய்தது. அப்பொழுது அதில் இருந்த முதலை ஒன்று மெல்ல வெளியே தலையை நீட்டியது. முதலையைக் கண்ட முயலுக்கு ஒரு யோசனை தோன்றியது. அது ஒரு தந்திரம் செய்து ஆற்றைக் கடக்க முடிவு செய்தது.

3. முயல், முதலையை நோக்கி, "முதலை அண்ணா! சுகம்தானா!" என்று கேட்டது. முதலை வெளியே வந்து, "தம்பி, சுகம்தான். நீ ஏதோ யோசனையில் ஆழ்ந்திருப்பதுபோல் தோன்றுகிறதே; என்ன யோசனை செய் கிறாய்?" என்று கேட்டது. முயல், "ஒன்று மில்லை, அண்ணா. இந்த ஆற்றங்கரையில் வசிக்கும் முயல்களின் எண்ணிக்கை அதிகமா, அல்லது ஆற்றில் வாழும் முதலைகளின் எண் ணிக்கை அதிகமா? என்று சிந்தனை செய் கிறேன். முயல்களே மிகுதி என்று நினைக் கிறேன்," என்று கூறியது.

4. அது கேட்ட முதலை, "ஒருநாளும் இல்லை. என் இனத்தவர்கள்தான் மிகுதி,"

என்றது. முயல், "அப்படியானுல் உன் இனத்தவர்கள் எத்தனை பேர்கள் இருப்பார் கள்?" என்று கேட்டது. முதலை, "நாங்கள் ஏறக்குறைய இருநூறு பேர்களுக்கு மேல் இருப்போம்," என்று கூறியது. "இருநூறு பேர்களா? உண்மையாக அத்தனைப் பேர்கள் இருக்கிறீர்களா? நான் இதை நம்பவில்லை," என்றது முயல். "நீ என் வார்த்தையை நம்பாவிட்டால், நான் என் இனத்தவர் எல்லோ ரையும் இங்கு அழைத்து வருகின்றேன். வேண்டுமாலுல் எண்ணிப் பார்த்துக்கொள்," என்றது முதலை.

5. முயல் தன் தந்திரம் பலித்தது என்று எண்ணி மகிழ்ந்தது. "அதுதான் நல்லது. அவர்களை அழைத்து, ஆற்றின் குறுக்கே வரிசையாக நிற்கச் செய். நான் ஒவ்வொருவ ராக எண்ணிக் கணக்கிட்டு வருகிறேன்," என்றது. உடனே முதலை தண்ணீருக்குள் மறைந்து சென்றது. சிறிது நேரத்தில் ஆற்றின் குறுக்கே பாலம்போல் முதலைகள் வரிசையாக மிதந்து நின்றன. முயல், "இப் படியே இருங்கள். நான் ஒவ்வொருவராக எண்ணுகிறேன்," என்று கூறி, முதல் முதலை யின் முதுகில் குதித்தது.

6. முயல் அப்படியே ஒவ்வொரு முதலை

யின் முதுகின்மேலும் குதித்துத் தாண்டி, ஆற்றைக் கடந்து, அக்கரையை அடைந்தது. கரையை அடைந்ததும் முயல் சிரித்துக் கொண்டே, "முதலைகளே, உங்களுக்கு மிகவும் நன்றி. ஆற்றைக் கடக்கவே நான் இந்தத் தந்திரம் செய்தேன்!" என்று கூறி, ஓடி மறைந்தது. முதலைகள் வெட்கத்தோடு நீருள் மூழ்கி மறைந்தன.

### சொற்களஞ்சியம்

| | | | |
|---|---|---|---|
| பெய்யாததால் | உலர்ந்து | பூண்டு | முதலை |
| அக்கரை | தாண்டி | மெல்ல | கடக்க |
| ஆழ்ந்து | எண்ணிக்கை | மிகுதி | இனத்தவர் |
| தந்திரம் | பலித்தது | குறுக்கே | மிதந்து |

### கேள்விகள்

1. முயல் ஏன் ஆற்றின் மறுகரைக்குச் செல்ல எண்ணியது?
2. முயல் தான் என்ன யோசனை செய்வதாக முதலையிடம் கூறியது?
3. முயல் முதலைகளின் தொகையை எவ்வாறு கணக்கிடுவதாகக் கூறியது?
4. முயல் எவ்வாறு மறுகரையை அடைந்தது?

### பயிற்சி

1. இவற்றைக் கவனிக்க :

கிடைத்தது — கிடைக்கவில்லை.
நினைக்கிறேன் — நினைக்கவில்லை.
நம்புகிறேன் — நம்பவில்லை.
சென்றது — செல்லவில்லை.
பலித்தது — பலிக்கவில்லை.

## இலக்கணம்

இராமன் புத்தகத்தை எடுத்தான்: இது ஒரு வாக்கியம். இதில் 'எடுத்தான்' என்னும் சொல் செயலைக் காட்டுகிறது. இது ஒரு வினைச்சொல். இச் சொல்லிலேயே இந்த வாக்கியத்தின் பயன் அடங்கி யிருக்கிறது; அதாவது, இச்சொல்லே இவ்வாக்கியத்தின் பொருளை முடித்து நிற்கிறது. ஆகவே, இவ்வாக்கியத் தில் இது பயனிலை. இவ்வாறு வாக்கியத்தின் பயன் அடங்கியுள்ள (வாக்கியத்தின் பொருளை முடித்து நிற்கிற) சொல் பயனிலை என்று சொல்லப்படும்.

'எடுத்தான்' என்னும் பயனிலைக்கு முன் 'யார்' என்னும் சொல்லை வைத்து 'யார் எடுத்தான்?' என்று கேள்வி கேட்டால், அதற்கு 'இராமன்' என்பது விடை யாக வரும். இவ்வாறு பயனிலைக்கு முன் 'யார்' அல்லது 'எது' என்று கேட்டு, அதற்கு விடையாக வரும் சொல் எழுவாய் என்று சொல்லப்படும்.

'எடுத்தான்' என்னும் பயனிலைக்கு முன் 'எதை' என்னும் சொல்லை வைத்து, 'எதை எடுத்தான்?' என்று கேள்வி கேட்டால், அதற்குப் 'புத்தகத்தை' என்பது பதிலாக வரும். இவ்வாறு பயனிலைக்குமுன் 'எதை' அல்லது 'யாரை' என்று கேட்டு அதற்குப் பதிலாக வரும் சொல் செயப்படு பொருள் என்று சொல்லப்படும்.



## 24. பனை மரம்

பனைமரமே ! பனைமரமே
ஏன் வளர்ந்தாய் பனைமரமே ?
நான் வளர்ந்த காரியத்தை
நாட்டாரே சொல்லுகிறேன் :
வீடுகட்ட மரமாவேன் ;
மேற் கூரை நாறுவேன் ;
கட்ட நல்ல கயிறுவேன் ;
கன்று கட்டத் தும்பாவேன் ;
பானை வைக்க உறியாவேன் ;
படுக்க நல்ல பாயாவேன் ;
சித்திரைக் கோடையிலே
சிறந்த நல்ல நுங்காவேன்.

பசித்து வந்த பேர்களுக்குப்
பனம் பழமும் நாளுவேன்.
நனைந்து வரும் பேர்களுக்கு
நல்ல குடை நாளுவேன்.
எழுதிப் படிப் பவர்க்கே
ஏடாய் விளங் கிடுவேன்.
ஏரிக் கரை மீதினிலே
எந்நாளும் வீற்றிருப்பேன்.

### சொற்களஞ்சியம்

நாட்டார் தும்பு நனைந்து ஏடு
வீற்றிருப்பேன்

### கேள்விகள்

1. பனைமரம் வீடு கட்ட எவ்வகைகளில் உதவுகிறது?

2. மக்களுக்குப் பனைமரம் எவ்வகைகளில் உதவுகிறது?

3. பனைமரம் பெரும்பாலும் எங்குக் காணப்படும்?

### பயிற்சி

பனைமரம் சொல்வது போலவே இப்பாடலில் வந்துள்ள கருத்துக்களை வாக்கியங்களில் அமைத்து எழுதுக.

# 25. விடு கவிகள்

## இவை யாவை?

1. அடி மத்தளம், இலை பர்வதம், பூப் பெரியது, காய் துவர்ப்பு, பழம் இனிப்பு.
2. ஊருக் கெல்லாம் ஒரே துப்பட்டி.
3. வண்ணான் வெளுக்காத வெள்ளை ;
   குயவன் செய்யாத பாண்டம் ;
   மழை பெய்யாத தண்ணீர்.
4. கத்தி போல் இலை இருக்கும் ;
   கதிர் போலப் பூப் பூக்கும் ;
   தின்னப் பழம் பழுக்கும் ;
   தின்னாத காய் காய்க்கும்.
5. மாமன் வீட்டுத் தோட்டத்திலே
   பச்சைப் பாம்பு தொங்குகிறது.
6. மண்ணுக்குள்ளே இருக்கும் மாயாண்டி
   உரிக்க உரிக்கத் தோலாண்டி.

இவற்றுள் பொருத்தமானவற்றைப் பொறுக்கி அததற்கு நேரே எழுது :—

புடலங்காய், தேங்காய், வாழை மரம்,
வேம்பு, வெங்காயம், ஆகாயம்.

### இலக்கணம்

கீழ்வரும் வாக்கியங்களிலுள்ள எழுவாய், பயனிலை, செயப்படு பொருள்களை எடுத்து எழுதுக :

1. தவமணி பந்தை வீசினான்.
2. வேலன் மரத்தை வெட்டினான்.
3. ஞானம் பெட்டியைச் செய்தான்.
4. குறவன் கூடையை முடைகிறான்.
5. குயவன் பானையைச் செய்கிறான்.

# 26. புகைவண்டிப் பிரயாணம்



1. நான் கிறிஸ்துமஸ் விடுமுறையைப் பாளையங் கோட்டையில் என் மாமன் வீட்டில் உற்சாகமாகக் கழித்தேன். விடுமுறை முடி வதற்கு இரண்டு நாட்களுக்கு முன், என் மாமா என்னை அழைத்துக்கொண்டு திருச் சிராப்பள்ளிக்குப் புறப்பட்டார். நாங்கள் திருநெல்வேலிப் புகைவண்டி நிலையத்தை அடைந்தோம்.

**சுந்தரம் :** மாமா, அந்தச் சன்னலின் வழி யாக நீங்கள் என்ன வாங்கினீர்கள் ?

**மாமா :** நாம் திருச்சிக்குச் செல்லவேண்டும் அல்லவா ? அதற்குரிய கட்டணத்தை

இங்கே செலுத்தி, **டிக்கெட்** வாங்கிக் கொள்ள வேண்டும். இதோ, நம் இரு வருக்கும் டிக்கெட் வாங்கி விட்டேன். வா, உள்ளே போகலாம்.

[மேல் பாலம் ஏறி மேடையை அடைந்தார்கள்.]

**சுந்தரம் :** இத்தனைப் பேர்களும் வண்டியில் ஏறுவதற்குத் தானே காத்துக்கொண்டிருக் கிறார்கள்? 'டாண், டாண்' என்று தொடர்ச்சியாக மணி யடிக்கிறார்களே, எதற்காக மாமா?

**மாமா :** நாம் ஏறவேண்டிய வண்டி இதற்கு முந்திய நிலையத்தை விட்டுப் புறப்பட்டு விட்டது என்பதை அறிவிப்பதற்காக மணி யடிக்கிறார்கள். இன்னும் சிறிது நேரத்தில் வண்டி இங்கு வந்து சேர்ந்து விடும். வண்டி வந்து சேருவதற்கு முன்பு மற் றொரு முறை மணி யடித்து எச்சரிப் பார்கள்.

**சுந் :** திரும்பவும் எதற்கு மணி யடிக்க வேண்டும்?

**மாமா :** 'இதோ வண்டி வந்துகொண்டிருக் கிறது. உங்கள் மூட்டை முடிச்சுக்களை எடுத்து வைத்துக்கொண்டு வண்டியில் ஏறுவதற்குத் தயாராக இருங்கள்' என்று

நம்மை எச்சரிப்பதற்காக மறுமுறை மணி யடிப்பார்கள்.

சுந்: அங்கு உயரமாக ஒரு கம்பம் நாட்டி யிருக்கிறார்களே, அது என்ன மாமா?

மாமா: அது **கை காட்டிக் கம்பம்** எனப் படும். அதன் மேலே கை போன்ற உறுப்பு தெரிகிறதல்லவா? இப்பொழுது அது நேராக நிற்கிறது. அந்தக் கை கீழே சாய்ந்திருந்தால்தான் வண்டி இங்கே வர லாம்; இப்படி நேராக இருந்தால் வண் டியை அங்கேயே நிறுத்திவிடுவார்கள்; கைகாட்டி சாய்ந்த பிறகுதான் வண்டியை மேலே செலுத்துவார்கள். அதோ, கை காட்டி சாய்கிறது பார்த்தாயா?

சுந்: ஆம் மாமா! அதோ தூரத்தில் புகை தெரிகிறது. புகைவண்டி வந்து கொண் டிருக்கிறது.

[வண்டித் தொடர் மேடையின் அருகில் வந்து நின்றது.]

சுந்: மாமா, மாமா, இதோ இந்த வண்டியில் ஏறிக்கொள்வோம். இதில் கூட்டம் இல்லை. தவிர, உட்காரும் இடங்களுக்கு மெத்தை யும் போட்டிருக்கிறார்கள். இதிலேயே ஏறிக்கொள்வோம்.

மாமா: நாம் இதில் ஏறக் கூடாது. இது

உயர் வகுப்பு வண்டி. இதில் பிரயாணம் செய்யவேண்டுமானல் அதிகக் கட்டணம் செலுத்த வேண்டும். நாம் மூன்ரும் வகுப்பு வண்டிக்குத்தான் 'டிக்கெட்' வாங்கியிருக்கிரேும். அதோ அந்தப் பெட்டியில் கூட்டம் சிறிது குறைவாக இருக்கிறது. நாம் அதில் ஏறிக்கொள் வோம்.

[இருவரும் ஒரு வண்டியில் ஏறி உட்கார்ந்து கொள்ளுகிருர்கள்.]

**சுந்.** : மாமா, கையில் கொடி பிடித்துக் கொண்டு ஒருவர் வருகிருரே, அவர் யார் மாமா?

**மாமா** : அவர்தான் 'கார்டு' என்பவர். அவரே இந்த வண்டித் தொடர் பாதுகாப் பாளர். கையிலுள்ள பச்சைக் கொடியை இப்பொழுது உயர்த்திப் பிடித்து ஆட்டிக் கொண்டு வாயில் ஊதல் வைத்து ஊது கிருர் பார். இவ்வாறு செய்தால் வண்டி புறப்படும். வண்டி புறப்பட்டுவிட்டது பார்த்தாயா?

**சுந்.** : வண்டியை நிறுத்த வேண்டுமானல் அவர் என்ன செய்வார்?

**மாமா** : சிவப்புக் கொடியை ஆட்டுவார். வண்டியை ஓட்டுபவர் அந்த எச்சரிக்கை

யைக் கவனித்து வண்டியை நிறுத்திவிடு வார்.

2. புகைவண்டி வேகமாக ஓடிக் கொண்டே இருந்தது. ஒவ்வொரு நிலையத் திலும் நின்று நின்று புறப்பட்டது. இரவு ஒன்பது மணிக்கு நாங்கள் திருச்சிராப் பள்ளியை அடைந்தோம். புகைவண்டிப் பிரயாணம் எனக்கு மிகவும் மகிழ்ச்சியை அளித்தது.

### சொற்களஞ்சியம்

| | | | |
|---|---|---|---|
| உற்சாகமாக | கட்டணம் | மேடை | தொடர்ச்சி |
| எச்சரிக்கை | முடிச்சு | தயாராக | சாய்ந்து |
| உயர் வகுப்பு | 'கார்டு' | பாதுகாப்பாளர் | |
| உயர்த்தி | நிறுத்த | ஓட்டுபவர் | |

### கேள்விகள்

1. புகைவண்டி நிலையத்தில் எதற்கு முதல் முறை மணி யடிக்கிறார்கள் ?

2. இரண்டாம் முறை எதற்கு மணியடிக்கிறார்கள் ?

3. கை காட்டிக் கம்பம் எவ்வாறு இருந்தால் வண்டியை அங்கேயே நிறுத்தி விடுவார்கள் ?

4. வண்டி புறப்படும் முன் 'கார்டு' என்ன செய் கிறார் ?

5. வண்டியை நிறுத்தவேண்டுமானால் அவர் என்ன செய்வார் ?

## இலக்கணம்

அந்த : இந்தச் சொல் மூன்று எழுத்துக்களால் ஆகிய சொல். இம் மூன்று எழுத்துக்களில் அ என்பது தனித்து ஒலிக்கும் எழுத்து. இது உயிரெழுத்து.

உயிர் எழுத்துக்கள் பன்னிரண்டு. அவையாவன :—

| அ | ஆ | இ | ஈ | உ | ஊ |
|---|---|---|---|---|---|
| எ | ஏ | ஐ | ஒ | ஓ | ஔ |

அ: இந்த எழுத்தின் உச்சப்பைக் கவனி. இது குறுகிய ஓசையை யுடையது. இவ்வாறு குறுகிய ஓசையை யுடைய எழுத்துக்களுக்குக் குற்றெழுத்துக்கள், அல்லது குறில் என்று பெயர். இவ்வாறு உயிரெழுத்துக்களுள் ஐந்து குற்றெழுத்துக்கள் இருக்கின்றன. அவை: அ, இ, உ, எ, ஒ.

ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ : இந்த ஏழு எழுத்துக்களும் நீண்ட ஓசை உள்ளவை. இவை நெட்டெழுத்துக்கள், அல்லது நெடில் என்று சொல்லப்படும்.

# 27. இளமை நிகழ்ச்சி



1. இப்பொழுது நம் பாரத நாட்டின் முதல் அமைச்சராய் விளங்கிவரும் பண்டித ஜவாஹர்லால் நேருவை நீங்கள் அறிவீர்கள். உங்களிற் சிலர் அவரைப் பார்த்தும் இருப்பீர்கள். அவருடைய இளமை நிகழ்ச்சிகளை நீங்கள் அறிந்து கொள்ளுவது நல்லது. அவற்றுள் ஒன்று கீழே தரப்படுகின்றது.

2. ஜவாஹரின் தந்தையின் பெயர் மோதிலால் நேரு என்பது; தாயார் பெயர் சொரூப ராணி அம்மையார். அவர்கள்

ஜவாஹரை மிகவும் செல்வமாகப் போற்றி வளர்த்து வந்தனர். அவர்கள் ஜவாஹர் விரும்பும் பொருள்களை எல்லாம் அன்புடன் வாங்கித் தந்து வந்தார்கள்.

3. ஜவாஹர் ஆறுவயதுச் சிறுவராக இருக்கும்பொது, ஒருநாள் அவர் தந்தை வெளியே சென்றிருந்தார். அப்பொழுது ஜவாஹர் அவர் அறைக்குள் மெல்லச் சென்றார். அங்கு, மேசை மேல் மோதிலாலின் விலையுயர்ந்த பேனுக்கள் இரண்டு இருந்தன; அவை மிகவும் அழகாய் இருந்தன. அவற்றைப் பார்த்த ஜவாஹர், 'இந்த இரண்டு பேனுக்களுள் ஒன்றை நான் எடுத்துக் கொண்டால் என்ன? அவருக்கு ஒரு பேனு போதாதா?' என்று எண்ணினர். உடனே ஒரு பேனுவை எடுத்து மறைத்து வைத்துக் கொண்டு வெளியே வந்து விட்டார். அதை அவர் யாரிடமும் கூறவில்லை.

4. அன்று மாலை மோதிலால் நேரு மாளிகைக்கு வந்தார். அவர் தம் அறைக்குச் சென்று பார்த்தபொழுது மேசை மேல் வைத்திருந்த இரண்டு பேனுக்களுள் ஒன்றைக் காணவில்லை. அவர் பல இடங்களில் தேடிப் பார்த்தும் அந்தப் பேனு கிடைக்கவில்லை. தம் மைந்தன்தான் அதனை எடுத்திருக்கவேண்டும்

என்று அவர் கருதினார். ஜவாஹரைத் தவிர வேறு யாரும் தம் அறைக்குள் சென்று பேனாவை எடுத்திருக்க முடியாது என்று அவர் எண்ணினார். அவர் உடனே ஜவாஹரைக் கூப்பிட்டு, "தம்பி, பேனாவை நீ எடுத்தாயா?" என்று கேட்டார். தந்தை சினந்து கொள்வார் என்று அஞ்சிய ஜவாஹர், "நான் அதை எடுக்கவில்லை," என்று உறுதியாகக் கூறிவிட்டார்.

5. மோதிலால், தம் மகன் கூறியதை முழுதும் நம்பவில்லை. அவர் ஜவாஹரின் அறைக்குச் சென்று அங்குத் தேடிப் பார்த்தார்; ஜவாஹர் மறைத்து வைத்திருந்த பேனா அகப்பட்டது. மோதிலால் மிக்க கோபத்துடன் தம் மைந்தனிடம் சென்றார்; "பேனாவை எடுக்கவில்லை என்று பொய் கூறினாய் அல்லவா? நீ என்னைக் கேளாமல் என் பேனாவை எடுத்ததே குற்றம்; அதை எடுக்கவில்லை என்று பொய் கூறியது அதைவிடப் பெருங்குற்றம்," என்று கூறி, ஜவாஹரை நையப் புடைத்தார்.

6. ஜவாஹர் அழுதுகொண்டே தம் தாயாரிடம் ஓடிச் சென்றார். சொரூப ராணி அம்மையார் தம் மைந்தனை அணைத்துக் கொண்டே, "குழந்தாய், நீ செய்தது தவறு என்று உணர்ந்து கொள். தவறு செய்தால்

தண்டனை கிடைக்கும். பேனுவை நீ அப்பாவைக் கேட்டு வாங்கிக் கொண்டிருக்க வேண்டும். அவரைக் கேளாமல் நீ எடுத்துக் கொண்டது தவறு. பேனுவை நான் எடுக்கவில்லை என்று நீ பொய் உரைத்தது மிகவும் தவறு. இனி, பிறர் பொருளை அவர்கள் அனுமதி இல்லாமல் எடுக்காதே. ஒரு பொழுதும் பொய் உரைக்காதே. என்ன கேடு நேருவதானுலும் உண்மையை ஒரு பொழுதும் மறைக்காதே;'' என்று கூறித் தேற்றினர்.

7. ஜவாஹர் தான் செய்தது தவறு என்று உணர்ந்து கொண்டார்; தன் பெற்றோரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டார். இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு, அவர், பிறர் பொருளைத் தொட்டதும் இல்லை; பொய் கூறினதும் இல்லை. அவரைப் போலவே நீங்களும் இளமையிலேயே நல்ல பழக்கங்களைக் கைக்கொள்ள வேண்டும்.

### சொற்களஞ்சியம்

| | | | |
|---|---|---|---|
| அமைச்சர் | செல்வமாக | போற்றி | மெல்ல |
| விலையுயர்ந்த | மைந்தன் | அருமை | மறைத்து |
| யாரிடமும் | உறுதியாக | கேளாமல் | நன்கு |
| சினந்து | நைய | புடைத்தார் | குற்றம் |
| அதைவிட | அனுமதி | கேடு | அணைத்து |
| தண்டனை | நிகழ்ச்சி | பழக்கங்கள் | தேற்றினர் |
| மன்னிப்பு | இளமை | கைக்கொள்ள | போற்றி |

## கேள்விகள்

1. ஜவாஹரின் பெற்றோர் யார்?

2. இரண்டு பேனுக்களைக் கண்ட ஜவாஹர் என்ன எண்ணினார்?

3. பேனா காணமற் போனதை அறிந்த மோதிலால் கருதியது என்ன?

4. பேனாவைக் கண்டெடுத்த மோதிலால், ஜவாஹரிடம் கூறியது என்ன?

5. ஜவாஹருக்குத் தாயார் உரைத்த நீதிகள் யாவை?

## பயிற்சி

1. சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுதுக:

விலையுயர்ந்த, உறுதியாக, மறைத்து, அகப்பட்டது, மன்னிப்பு, அனுமதி.

## இலக்கணம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| க் | ங் | ச் | ஞ் | ட் | ண் |
| த் | ந் | ப் | ம் | ய் | ர் |
| ல் | வ் | ழ் | ள் | ற் | ன் |

மேற்கண்ட பதினெட்டு எழுத்துக்களும் மெய் எழுத்துக்கள். மெய் எழுத்து தனித்து ஒலிக்காது.

அந்த: இந்தச் சொல்லில் அ-உயிரெழுத்து; ந்-மெய் எழுத்து. த என்னும் எழுத்து, (த்+அ) த் என்னும் மெய் எழுத்தும், அ என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உண்டாகியது. இவ்விதம் உயிரும் மெய்யும் சேர்ந்து உண்டாகும் எழுத்துக்கள் உயிர்மெய் எழுத்துக்கள் என்று சொல்லப்படும். ஆதலால், உயிர்மெய் எழுத்துக்கள் (18 × 12) 216 ஆகின்றன.

# செய்யுட் பாடம்

## 1. ஆத்தி சூடி

1. அறனை மறவேல்.
2. அரவம் ஆட்டேல்.
3. இணக்கம் அறிந்து இணங்கு.
4. இயல்பு அலாதன செய்யேல்.
5. இயல்வது கரவேல்.
6. உத்தமனாய் இரு.
7. ஊக்கமது கைவிடேல்.
8. ஊருடன் கூடி வாழ்.
9. ஒப்புர ஒழுகு.
10. ஔவியம் பேசேல்.
11. கண்டு ஒன்று சொல்லேல்.
12. கெடுப்பது ஒழி.
13. கூடிப் பிரியேல்.
14. செய்வன திருந்தச் செய்.
15. ஞயம்பட உரை.
16. தேசத்தோடு ஒத்து வாழ்.
17. நீர் விளையாடேல்.
18. பிழைபடச் சொல்லேல்.
19. பெரியாரைத் துணைக் கொள்.
20. வஞ்சகம் பேசேல்.

—ஔவையார்

## 2. கொன்றை வேந்தன்

1 அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்.
2. ஆலயம் தொழுவது சாலவும் நன்று.
3. ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்.
4. ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்.
5. எண்ணும் எழுத்தும் கண் எனத் தகும்.
6. ஓதாதார்க்கு இல்லை உணர்வொடு ஒழுக்கம்.
7. கீழோர் ஆயினும் தாழ உரை.
8. கைப்பொருள் தன்னின் மெய்ப்பொருள் கல்வி.
9. சீரைத் தேடின் ஏரைத் தேடு.
10. சூதும் வாதும் வேதனை செய்யும்.
11. சோம்பர் என்பவர் தேம்பித் திரிவர்.
12. தந்தை சொல் மிக்க மந்திரம் இல்லை.
13. தாயிற் சிறந்ததொரு கோயிலும் இல்லை.
14. தொழுதூண் சுவையின் உழுதூண் இனிது.
15. தோழனோடும் ஏழைமை பேசேல்.
16. நுண்ணிய கருமமும் எண்ணித் துணி.
17. பாலோடாயினும் காலம் அறிந்து உண்.
18. முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்.
19. மருந்தே ஆயினும் விருந்தோடு உண்.
20. மூத்தோர் சொல் வார்த்தை அமிர்தம்.

—ஔவையார்

## 3. வெற்றி வேற்கை

1. எழுத்தறி வித்தவன் இறைவன் ஆகும்.
2. கல்விக் கழகு கசடற மொழிதல்
3. செல்வர்க் கழகு செழுங்கிளை தாங்குதல்.
4. மன்னர்க் கழகு செங்கோல் முறைமை.
5. மந்திரிக் கழகு வரும் பொருள் உரைத்தல்.
6. தந்திரிக் கழகு தறுகண் ஆண்மை.
7. வறிஞர்க் கழகு வறுமையிற் செம்மை.
8. உண்டிக்கழகு விருந்தோடு உண்டல்.
9. அறிஞர்க் கழகு கற்றுணர்ந்து அடங்கல்.
10. உழவர்க் கழகு உழுதூண் விரும்பல்.

—அதிவீரராம பாண்டியர்

## குறிப்புரை

### 1. ஆத்தி சூடி

(1) அறன் - தருமம்; (2) அரவம் - பாம்பு; (3) இணக்கம் - நல்ல குணம்; இணங்கு - சேர், நேயம் கொள்; (4) இயல்பு அலாதன - இயற்கைக்கு மாறானவை; (5) இயல்வது - முடிந்தது; கரவேல் - மறைக்காதே, ஒளிக்காதே; (6) உத்தமனாய் - நல்ல குணம் உள்ளவனாய்; (7) ஊக்கம் - உற்சாகம்; (9) ஒப்புரவு - உலக நடையை அறிந்து அதன்படி; ஒழுகு - நட; (10) ஒளவியம் - பொறாமைச் சொற்கள்; (11) கண்டு - 'ஒன்றைக் கண்டு; (14) திருந்த - நன்றாக; (15) ஞயம்பட - நயம் பொருந்த; (17) நீர் - ஆழமாக உள்ள நீர் நிலை.

### 2. கொன்றை வேந்தன்

(1) அன்னையும் பிதாவும் - தாயாரும் தகப்பனாரும்; முன் அறி - முதலில் அறியும்; (2) சாலவும் - மிகவும்; (3) ஈயார் - (தருமம்) கொடாதவர்; தேட்டை - செல்வம்; (4) வேருடன் - வம்சத்துடன்; (6) உணர்வொடு - அறிவுடன் கூடிய; (11) தேம்பி - வருந்தி; (16) நுண்ணிய - சிறிய; கருமமும் - செயலும்; (18) செய்யின் - செய்தால்.

### 3. வெற்றி வேற்கை

(1) இறைவன் - கடவுள்; அறிவித்தவன் - கற்றுக் கொடுத்தவன்; (2) கசடு அற - குற்றம் நீங்க (3) செழுங்கிளை - நெருங்கிய சுற்றம்; (4) முறைமை - நீதி முறை; (5) வரும்பொருள் - பின்னே நேரக்கூடியவைகளை; (6) தந்திரி - சேனைத் தலைவன்; தறுகண் - அஞ்சாமை; ஆண்மை - வீரம்; (7) வறிஞர் - வறுமையுடையவர்கள், ஏழைகள்; (9) கற்று உணர்ந்து அடங்கல் - நூல்களைக் கற்றுப் பொருளைத் தெரிந்து கொண்டு அடக்கமாக இருத்தல்.

APPROVED FOR CLASS USE
BY THE MADRAS TEXT-BOOK COMMITTEE
[Fort St. George Gazette dated 4-5-1955
Supplement to Part I-B, Page 8]

# DRAVIDA MANI VACHAKAM

## STANDARD III

BY
E. RATNABAI DAVIS, M.ED.
AND
REV. BR. M. A. MANUEL, S.H.J., B.A., L.T.

THE INTERNATIONAL PUBLISHING CO.
NUNGAMBAKKAM, MADRAS

 [*Price As.* 8